# "BLESSED ARE THEY THAT ARE PRIVILEGED TO WORK FOR THE CHILDREN."

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்.] [God is Love: Knowledge is Power: *Aum.*

"New Series" ஸத்தியமே ஜெயம்—SATYAMEVA JAYATE. "Approved"

புத்தகம். 22.] 1914ஸ் மேமீ, ஆனந்தஸ் வைகாசிமீ [சஞ்சிகை 2.

## "BLESSED ARE THEY THAT ARE PRIVILEGED TO WORK FOR THE CHILDREN."

**More Approvals from Elders of Society.**

"BLESSED ARE THEY THAT ARE PRIVILEGED TO WORK FOR THE CHILDREN, for they shall see the Spirit of God working in and through the human heart."

A respected and much honoured Member of Society, a Companion of the Most Eminent Order of the Indian Empire, in greeting our Editor on the Pledge required of him and taken by him, and the large scope for the Expansion of Our Work, says :—"Your work in connection with the journal *Viveka Chintamani*, is universally approved. You need not take up any work not connected with the journal. God will help you."

An Educationist of high standing, and acknowledged ability, a distinguished Member of the Imperial Service Order says :—"Go on as usual. God will help you in your work. Opposition and obstructions overcome are invaluable aids in the path of true Progress."

"I have been told by Tamil Scholars that this journal is very instructive. The fact that it is 22 years old shows that it is a very useful publication."—Extract from personal communication of a retired Dewan.

A Tamil Scholar of acknowledged repute and ability remarked *en passant* that he knew the Editor of this Journal for a long time from his student days, and has always found him "to be a man of remarkable devotion to duty who has been quietly and unobtrusively going on with his work in connection with the *Viveka Chintamani* through good report and evil report. He has found him to be eminently successful in his own way."

We quote a few more opinions at random:—

"All success in this manifestation of your many-sided activities."—Dr. D. Duncan M.A., D. Sc.

"The school children are very eager over the "*Viveka Chintamani*," it is their favourite magazine." . . . "It is not only the children who like the "*Viveka Chintamani*," it is the teachers too; they say they often get useful hints from it."—Mrs. Pittendrigh.

"You have accomplished a great deal in the establishment of the *Viveka Chintamani* and the issue of reprints from it."—*Inspectress of Girls' Schools, N. & C. Circles.*

"Is as a rule interesting from end to end." —*Dr. G. U. Pope.*

"Dr. Duncan spoke to me with approval of your books and so did Mr. J. of the Danish Mission."

Regarding the *Viveka Chintamani* Series (which in these days of literary piracy and colourable imitations are largely copied with impunity), Rao Bahadur C. Nagoji Rao, (now retired Inspector of Schools), has recorded his opinion that they are "excellent and deserve to be extensively read."

The Madras Text Book Committee has declared them "suitable for School Libraries."

*H.O.D. Hardinge, Esq., I.C.S.*, :—"The series is admirable."

*Mrs. Pittendrigh* :—"They are delightful books."

*The Madras Mail* :—"We trust that these publications will meet with the official patronage which they so richly deserve."

"I consider them excellent and the price reasonable."—*Inspectress of Girls' Schools, S. & W. Circles.*

"The excellence and usefulness of his publications are now recognised on all hands."—*Dr. Sir S. Subrahmania Iyer, L.L.D., K.C.I.E.*

"Deserving of every encouragement by the public."—*The Hindu.*

"Ought to be welcomed in every Hindu Home."—*The Madras Standard.*

## THE VIVEKACHINTAMANI "NEW SERIES."

"We heartily welcome the "New Series" of *Vivekachintamani* beginning with the twenty-second yearof its publication, specially adapted for school-use and home-reading and approved as suitable for the purpose by an influential committee of parents, teachers and educationists of good standing,having the control of child-education and the making of the future citizen in their hands. We see that the Editor is pledged to exert himself once again to make fhe *Vivekachintamani* what it really was before—"the most amusing, the most interesting and the most instructive," and progressive Tamil Journal having the "widest circulation" among parents and children at home or in school. We have the assuring testimony of one educationist of good standing that "the journal has considerably changed its tone" with a view to making it suitable and quite acceptable to school-children for whose needs the editor now feels called upon to minister with an earnestness of purpose which is so'characterestic of him."

"We heartily endorse the gratifying view expressed by another educationist of good standingthat"the boys and girls whomay be"—and in ourview,all are soon bound to become—"habitual readers" of the Vivekachintamani, "will surely become useful citizens of our country with true devotion to their God and their King and to the sweet service of their great motherland" as His Excellency the Viceroy took care to emphasise in his great speech at the autumn session of the Supreme Legislative Council, while adumbrating the New Educational Policy of the Government of India inspired by the high ideals expressed by the King-Emperor, the vernacular translation of whose speeches while in this country, the Madras Government has wisely decided to place within easy reach of every school and every village in this Presidency."

"It is pleasing to note that the voice raised by Mr. Sharp, the Director of Public Instruction in the North in favour of cultivating the civic conscience in the child-mind has been listened to and is being acted upon by a man of such ripe experience and sobriety of judgement as the veteran Editor of the Vivekachintamani, whose educational activities rightly earned for him "the best thanks" of such a discriminating judgeof character as H.M. King Edward was when Prince of Wales, whom he afterwards described and mourned for as "Our Citizen-King."—*Extracts from the Dailies.*

வி வே க  சிந்தாமணி

## CHILD-EDUCATION: WHAT IT MEANS.

"Satisfy the natural curiosity to know."

"The child is new to earth and sky and even the minutest thing appears to him a curiosity if not a mystery.........It is a queer notion of parents that *School-going* is education and *memorising* is learning. Education is broader than many of us are prepared to believe. The child begins to learn from the moment that he is ushered into the world, and the very novelty of the situation to which he is introduced at birth, is the first of a series of lessons that are to end with the end of all that is perishable in him. Every moment of his existence on this side of the grave he learns—and school-going is a part and a very poor part it must be said —of this life-long teaehing, and memorising is nothing but a weak instrument with which this long apprenticeship is served. Parents and teachers should always remember that to satisfy this natural curiosity of the child (to know by questioning) is not a negligible factor in the education of the child."

---

## பால போதம் என்றால் என்ன?

பாலன் என்றால் குழந்தை, போதம் என்றால் புத்தியினால் அறியும் அறிவு. குழந்தைகள் தம் புத்தியினால் அறியும் அறிவுக்கு "பாலபோதம்" என்று பேர். குழந்தை-மனம் மாசு மறுவற்றது. அப்படியென்றால் துல்லியமாயுள்ளது. மனதின் விகாரங்கள் எல்லாம் தோற்றாமையால் மனது பாற்கடலில் மிதக்கும் ஆலிலைபோல் பச்சென்று ரம்மியமாய் நிர்விகாரமாய் நிச்சலனமாயிருக்கும்.

குழந்தைகளே, நீங்கள் ஆலமரத்தைப்பார்த்திருக்கிறீர்களா? அதோ சாலையோரத்திலிருக்கும் ஆலவிருக்ஷத்தைப் பாருங்கள். அதன் இளந்தளிர்கள் இளவெயிலில் தகதகவென்று மரகதம் போல் பச்சையொளிமின்னப் பிரகாசிக்கின்றது பாருங்கள்! அதன் கிளைகள் வெகு தூரம் பரவியிருக்கின்றது பாருங்கள். அக்கிளைகளிலிருந்து ஆலம் விழ்து தோரணங்கட்டினாற்போல் தொங்குவது எவ்வளவு அழகாயிருக்கின்றது பார்த்தீர்களா! அந்த விழ்துகளின் நுனி எவ்வளவு மிருதுவாயிருக்கின்றது பாருங்கள். அதற்குமேல் அவை எவ்வளவு பலமுள்ளவைகளாக விருக்கின்றன பாருங்கள். அந்த விழ்து மேலிருந்துண்டாகி பூமியை நோக்கிச் செல்லுகின்றது. பூமியில் பட்டதும் அது நிலத்தில் இறங்கி ஆழமாய் வேரோடி உறம் பெற்று வளர்ந்து பருமனடைகின்றது. பூமியில் வேரிறங்கும் மட்டும் அதற்கு வேண்டிய ஸாரத்தை அது மரத்தின் கிளையிலிருந்து இழுத்து உட்கொள்கிறது. பூமியில் வேரிறங்கின பின் பூமியிலிருந்து ஸாரத்தையிழுத்து தான் உறம் பெறுவதோடு கிளைகளையும் உறம் பெறச்செய்கிறது. ஆலவிருக்ஷத்தின் மூலமரம் மக்கி மடிந்து போனாலும் விழ்துகள் பருத்தி மரம்போல் உறம்பெற்று அதன் கிளைகளுக்குப் பழுது வராமல் அவைகளைத் தாங்கிநிற்கும். குழந்தை-மனம் வளருவதும் இப்படியே யென்று நீங்கள் அறிய வேண்டும். ஆலவிருக்ஷத்தின் மூலமரம் தேஹம். அதன் விழ்துகுகள் தான் மனம்.

பெற்றோர்களே, இங்கேயுங்களுக்கு ஒரு வார்த்தை சொல்லுகிறேன், கேளுங்கள். அந்தக்குழந்தை-மனம் விஷயப்பற்று என்கிற பூமியை நோக்கிச் செல்லுகிறது. (விஷயப்பற்று என்பதை 'Sense impressions'என்பார்கள்). இந்த விஷயப்பற்றினால் தான் குழந்தை மனம் உறம்பெற்று (உலகஞானத்தில்) விரிய வேண்டும். இதற்கும் தத்துவஞானத்துக்கும் வெகுதூரம். தத்துவஞானம் குழந்தைகளிடத்தில் இயற்கையறிவாக அமைந்திருக்கிறது. குழந்தை-மனம் விரிந்து விஷயஞானத்தில்

விருத்தியடையவேண்டும். விஷயஞானத்தில் விருத்தியடைந்தபின், அதில் முதிர்ந்த புத்தி, தரையில் வேரூன்றிய ஆலம் விழ்துபோல், விஷயஞானத்திலிருந்து தத்துவத்தைக்கிரகிக்கும் சக்திவாய்ந்ததாகும். தத்துவம் என்பது (தத் + துவம் = அது நீ,) அறிவேயுருவாயமைந்துள்ள உண்மைக்குச் சொல்லுகிறது. வயதில் முதிர்ந்து மனப்பயிற்சிபெற்றவர்கள் காரண காரியதோரணை யறியும் விசாரபுத்தியின் (Reason) வலிமையினாலே விஷயங்களின் உண்மைகளைக்கிரகிக்கிறார்கள். குழந்தைகளோ அப்படியல்ல. விஷயத்தைக்கிரகிக்கும் இந்திரியங்களாலே விஷயஞானம் (Sense Impressions of the World) பெற்று, அந்த விஷயஞானம் முதிர்ந்த பின் காரணகாரிய தோரணையறியும் புத்திக்கு ஆராய்ச்சி யுண்டாகி "விஞ்ஞான போதம்" சித்திக்கப்பெறுகிறார்கள். ஆகவே பாலபோதம் என்பது ஆலமரத்தின் கிளையிலிருந்து கீழே யிறங்கிவரும் விழ்துபோன்றது.

அது பூமியில் இறங்கினபின் தான் உறப்பெறும். இடையில் அதைத்தொட்டு இடர்புரிந்தால் அப்படியே வளர்ச்சிகுன்றி கட்டையாக நின்று விடும். அஃதேபோல் குழந்தை-மனம் விரிந்து விஷயஞானத்தில் முதிர்ச்சியடையுமுன் அதற்கு நிவிருத்திமார்க்க வித்தைகளைப் போதித்தால், குழந்தை மனம் விரியாது புத்தி மந்தப்பட்டுக் கட்டையாய் நின்றுவிடும். ஆகையால் வேதாந்தஞானம் கைவந்த தெளிந்த-மனசுள்ளவர்கள் உலகத்தாரைவிட என்னதான் மேல்பதவியிலிருந்தாலும்குழந்தைகளிடத்தில் தம் வேதாந்த ஞானத்தைக் காட்டமாட்டார்கள். குழந்தைகளுக்கு விஷயங்களைக் கிரஹிக்கும்புத்தி தானே விருத்தியாகவேண்டும். இதற்குப் பிரவிருத்தி மார்க்கம் என்று சொல்லுகிறது. விஷயநிக்ரகம் செய்யும் வழிக்கு நிவிருத்தி மார்க்கம் என்று சொல்லுகிறது. இவ்விரண்டும் வேறுபட்ட இரண்டு மார்க்கங்கள் அல்ல. ஆலம் விழ்து மேலே யிருந்து கீழேயிறங்கி பூமியைப்பற்றிய பின் கீழேயிருந்து சாரத்தைக்கிரகித்துக்கொண்டு மேலே போவதுபோல, குழந்தை-மனம் விஷயஞானத்தால் விரிந்து முதிர்ந்தபின் அதுவே திரும்பி விசார ஞானத்தால் (by the exercise of Reason) விவேக புத்திவிருத்தியடைந்து விஷயநிக்ரகம் செய்யும் ரகஸியத்தை யுணர்ந்துகொள்ளும்.

ஆகையால் "பருவத்தே பயிர்செய்" என்கிற மூதுரையை அனுஸரித்து, குழந்தைகளுக்குப் பாலபோதம் செய்யும் பொழுது அவர்கள் மனோபக்குவமறிந்து விஷய கிராஹிய சக்தியினால் அவர்கள் மனம் விஷயஞானத்தில் விரிந்து வளரும்படி செய்யவேண்டும். இது தான் பிரகிருதிசுபாவம் என்று சொல்லும் இயற்கை அமைப்பு. இதற்கு விரோதமாக நடந்தால் அநர்த்தம் விளையும். பாலபோதம் என்பது பிறந்ததுமுதல் ஜன்மம் அறுகிறவரையில் தொடர்பிடியாய்த் தொட்டுத் தொடர்ந்து நடக்கும் விருத்தி ஞானத்துக்கும் பொருந்தும். இந்த விருத்தி ஞானத்துக்குத்தான் உண்மையாய் (Education,) என்று சொல்லுகிறது. அப்படியென்றால், 'drawing out'—அதாவது, அறிவு விரிந்து மலரச்செய்கிறது என்று அர்த்தம்.

---

## THE MISTAKE OF METHOD IN CHILD-EDUCATION.

"READ AND YOU WILL KNOW."

"A child takes in the impressions of the world outside mainly through the gateways of the senses which feed the reason and are ultimately fed by it. An adult on the other hand, depends more upon his reason than on his sense-perceptions. In the child the reason is still undeveloped and the senses assert their undisputed authority. In the adult senses are thrown to the back-ground and reason holds absolute sway. There is thus a life-long schooling—though the means with which knowledge is acquired are different at different stages of life. And the mistake that is generally committed in education is to confuse the method of one with that of the other. We

try to explain in the terms of our consciousness in which the elements of reason are predominent, the tendencies of the child-mind in which the perceptual aspects of development are the prevailing traits. We cannot bring ourselves to think as the child thinks—the wealth of our knowledge and associations make us quite blind to the true perspective of the child-mind. The possession of a philosophical mind may be an enviable thing but to project it too much into the youthful mind is folly. If you cannot come down to the level of the child your pedagogy is a serious encumbrance and not a desirable possession."

---

## பாலபோத சிக்ஷையில் நேரும் ஓர் பெருந் தவறு.

போதனு முறையில் சிக்ஷை, தீக்ஷை யென்று இரண்டுண்டு. சிக்ஷை யென்பது (Method) பழக்க வழக்க முறையைச் சுட்டும். தீக்ஷை (Principle) யென்பது உண்மையை ஓர்ந்துணரும் முறையைச் சுட்டும். குழந்தைகளுக்கு மனம் விரியவேண்டி அவர்கள் புலன்களுக்குத் தென்படும் விஷயங்களை அவர்கள் நன்றாகக் கவனித்து விஷயஞானம் பெறும் முறை (Object-lessons) போதித்தல் சிக்ஷையாகும். புலனறிவாலுணர்ந்து கிரஹித்ததை விசார புத்தியால் (Reason) ஆராய்ந்து அவற்றின் நித்தியமான குணங்களை உபாத்தியாயர் சொல்லும் குறிகொண்டு "குரு சொல் ஒரு சொல்" என்றபடி அவர் உபதேசலக்ஷியத்தில் மனம் குவிந்து பற்றி அதனுண்மையை லக்ஷிய லக்ஷண முறைபற்றி உள்ளறிவால் ஓர்ந்துணர்ந்து ஐயந்திரிபற அதில் திடம் பெறல் தீக்ஷையாகும். சிக்ஷை யென்பது பயிர்ச்சி சாதனம். தீக்ஷை யென்பது உணர்ச்சி சாதனம். பயிர்ச்சியும் உணர்ச்சியும் வேறல்ல. உழுது பண்படுத்திய நிலத்தில் விதைவிதைத்துக் களைபிடுங்கி நீர்ப்பாய்ச்சிப் பழுதுவாராமல் வளர்த்தல் சிக்ஷை சாதனமாகும். விதைத்து முளைத்தது பழுதுவராமல் வளர்ந்து முதிர்ந்து அதற்கு இயல்பான பலனைத்தரப் பார்த்து அதையுள்ளபடி யோர்ந்துணரல் தீக்ஷா ஸாதனமாம். எள்ளுப் போட்டால் கொள்ளு விளையாது என்பது தீக்ஷா ஞானமாகும். விதை விதைக்கு முன் நிலத்தையுழுது பண்படுத்திப் பரம்படித்துப் பக்குவமாக்கவேண்டும், பின்னர் களை பிடுங்கி நீர்ப்பாய்ச்சி மாடு மேயாமலும் பக்ஷி மிருகங்கள் பயிரை யழிக்காமலும் பாதுகாக்க வேண்டுமென்பது சிக்ஷா ஞானமாகும்.

பாலபோத சிக்ஷையில் (in the Method of Child-Education) ஓர் பெருந்தவறு நேருவது வழக்கமாயிருக்கிறது. அது பிள்ளைப் பேறு பெற்ற விவேகத்தாய்க்கு தெய்வீகமாய் நேருவதில்லை யானாலும், கூலிக்கு மாரடிக்கிற வழக்கமாய், வயிற்றுப் பிழைப்பை யுன்னி, வாங்குகிற சம்பளத்துக்கு வேலை செய்யவேண்டுமென்கிற நிர்ப்பந்தத்தின்மேல் பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்தில் மறித்துவைத்து, பாடம் சொல்கிற வியாஜம்கொண்டுகாலத்தைப் போக்கும் உபாத்தியாயர்களுக்கு அந்தத்தவறு நேருவது மிகவும் சகஜமாயிருக்கிறது.

குழந்தை-மனம் முன் விவரித்தபடி புலன் வழிசென்று விஷயம் பற்றினுலிழுக்கப்பட்டு விஷயங்களைக் கிரஹிக்கும் சுபாவசக்தி வாய்ந்திருக்கிறது. உலகத்தில் அடிபட்டு வளர்ந்தவர்களுடைய முதிர்ந்த-மனம் விஷயப்பற்றை நீக்கி விசாரபுத்தியினுல் "வஸ்து நிச்சயம்" என்கிற விஷயங்களின் உண்மையைக் கிரஹித்துக்கொண்டு விளங்கிவருகிறது.

குழந்தை-மனம் விஷயப்பற்றினுல்முதிர்ந்து விஷயஞானத்தால் விசாரபுத்தி யேற்பட்டு விருத்தியடைந்து வருகிறது.

முதிர்ந்த-மனம் விசார-ஞானத்தால் விவேக முதிக்க விஷய நிக்ரஹம் செய்து இந்திரியங்களையடக்கியாண்டு ஜிதேந்திரியத்துவம் (இந்திரியஜயம்) அடையப் பார்க்கிறது. பிரவிருத்திமார்க்கத்தில்முதிர்ந்தவர்கள் குழந்தை மனத்தின் சுபாவமறியாது, தங்களுடைய விரிந்த ஞானத்தாலுணர்ந்ததைக்கொண்டு குழந்தை மனத்தின் சுபாவத்துக்கு விரோதமாகத் தமது

ஸ்வயஞானத்தைக் குழந்தைமனதின் விஷய தரிசன ஞானமாகப் பாவித்து அவர்கள் மேமேலேற்றி வில்லங்கம் விளைக்கிறார்கள். இவர்களுக்கு விசாரஞானத்துக்கும் விஷயஞானத்துக்குமுள்ள வித்தியாஸம் தெரியாமையால் தாங்கள் அஹமுகவிசாரத்திலறிந்ததை குழந்தைகளின் பஹிர்முகதரிசனத்தோடொத்ததாக மயங்கி மாறாட்டம் செய்கிறார்கள். இதனால் குருவுக்கும் சிஷ்யனுக்கு மிருக்கவேண்டிய பரஸ்பர மனவொற்றுமை தவறிப்போகிறது. மனம் பேதித்தால் போதனாசக்தி குறையும். போதனா சக்தி குறையும்போது கிராஹிய சக்தியும் குறையும். இதனால் போதிக்கும் வாத்தியாருக்கும் படிக்கும் பிள்ளைகளுக்கும் இருக்கவேண்டிய மனராசியற்றுப் போய் அன்பும் ஆதரவும், நேசமும் விசுவாசமுமிருக்கவேண்டியதற்கு பதிலாக துன்பும் தூற்றலும், அச்சமும் அருவெறுப்பும் உண்டாகிறது. இதையுதாஹரித்துக் காட்டவேண்டியே "நெடுமால் திருமருகா" என்கிற விக்னேசுவர ஸ்துதியைப் பள்ளிப்பிள்ளைகள் வித்தியாசம் பாராட்டி

"நெடுமால் திருமருகா
நித்தியம் நித்தியமுன்னிழவா!
வாத்தியார் சாகாரா
வயிற்றெரிச்சல் தீராதா!"

என்று விபரீதபாவனை செய்வதாகக் காட்டியிருக்கிறார்கள்.

பாலபோத சிக்ஷை, குழந்தைக்குத் தாய் பாலமுத மூட்டுவதுபோல்,குழந்தைகள் மனம் நோவாமல், வாசிக்கும் சிரமம் தெரியாமல், அவர்களுடைய சுபாவமறிந்து இயற்கை விரோதமின்றி நளினமாய் எதையும் லீலாவினோதமாக நயம்பெறத்தானே போதிக்கவேண்டும். விசாரஞானத்துக்கும் விஷயஞானத்துக்குமுள்ள பேதம் தெரிந்து குழந்தைகள் மனோ நிலைக்குத்தக்கபடி, போதகர் படியிறங்கிப் போதித்தால், இந்த வீண் வில்லங்கமெல்லாம் விளையாது.

விசாரஞானமும் தத்துவஞானமும் விசேஷ பாக்கியங்கள் தான். ஆனால் எதையும் பக்குவமறிந்து போதிக்கவேண்டும். பெரியவர்களுக்கு ஆகாரமாகும் அன்னம் பச்சைக் குழந்தைக்கு ஊட்டலாகுமா? ஆகாதுபோல், விஷயஞானத்தால்முதிர்ந்த மனதுக்கு விசாரபுத்தியிலுண்டாகி விளங்குவது எதையும் புலன்வழி சென்று கிரஹிக்கும் சுபாவ கவனசக்தி வாய்ந்த குழந்தைகள் மனதுக்கு நிதரிசனமாக விளங்காது. ஆகையால் வாலிபர்களுக்கு வேதாந்த விசாரமும், நிவிருத்திமார்க்க உபதேசமும் கூடாதென்பது ஸர்வ ஸம்மதம்.

"வாலிபமும் காயிதமும் வாய்ந்த
வுருக் காட்டுமென்று
மேலறிவாய்த் தான் வளர்க்க
வேணுமிக்க கல்வியென்றார்!"

பெற்றதாய்க்கு தெய்விக புத்தியினால் பிள்ளையை வளர்க்கும் பேரறிவு தானே சித்திக்கிறது. இது அன்பு காரணத்தினால் அன்பின் சக்தியாகிய அருட் பிரஸாதமாகும். பெற்ற தாய்க்கு மேலே சொன்னபடி "வாலிபமும் காயிதமும் வாய்ந்தவுருக்காட்டுமென்று" அதாவது விஷயஞானம் இலகுவில் படியும்படியான பக்குவம் வாய்ந்த இளமனதிற்கு விசார புத்தியின் சாதக சாதனமில்லையென்றுணர்ந்து,— "மேலறிவாய்த் தான்வளர்க்க வேணும் மிக்க கல்வி" யென்றால், சம்பளத்துக்குச் சேவிக்கும் உபாத்தியாயர்களுக்கு எவ்வளவு விவேகமும் வாத்ஸல்யமும் உயர்ஞானமும் இருக்கவேண்டாமென்பதை இதைவாசிப்போர் தாமே ஊகித்துணர்ந்து கொள்ளவேண்டும்.

---

## NATURAL SIMPLICITY THE *SINE QUA NON* OF CHILD-EDUCATION.

"What is required for the education of the child-mind is quite simple. It is in encouraging the natural activity of the body and senses essential to the harmonious development of the body and mind, guarding against lop-sidedness of any kind in the drawing out of its soul-life. No elaborate process, nor any artificial contrivance is wanted here. Nature's laws are simple and the education that will

help on the processes of nature must also be very simple. A most intricate system often defeats its own purpose. The child-mind is not a complicated study. It is an impulsive phenomenon backed by a dawning reason. The Educator in all his work must take note of this broad fact and should always try to develop the latter with the help of the former. Impulse is not a mean factor in education and it should be utilised for the attainment of a noble end, viz., the Development of Reason which Locke describes as "the candle of the Lord set by Him in men's minds."

"Simple truth is as complex as a woman."—*Carmen Sylva, (the Literary Queen of Roumania).*

---

## "அம்மா நீ காட்டுவது சுலபவழி, இருத்துவது கடின நிலை".

"பிரகிருதியினுண்மையில் பரமனைக்காணலாம்." பிரகிருதியென்பது ஆனந்தத்தாய். அவள் அறிவுருவாயிருக்கிறாள். அறிவு என்பது அறியும் சக்தி. அறியும் சக்தி யெல்லாருக்கும் உண்டு. ஆனால் அறியும் வழி தான் அவரவர்க்குத்தக்கபடி வேறு பட்டிருக்கும். குழந்தைக்கு அறியும் சக்தியிருக்கிறது. பிறந்தது முதல் அது அந்த சக்தியை உபயோகித்துக் கொண்டேயிருக்கிறது. அறிவின்றிச் செயலில்லை. ஆதலால் குழந்தைகளுக்குப்பாலபோதம் செய்வதில் அனுஷ்டிக்க வேண்டிய விதி வெகு சுலபம். அது என்ன வென்றால் சுபாவத்தை யொட்டி அது அறியும் வழி யெதுவோ அதையறிந்து, அதன் மனோநிலையறிந்து, மனோபக்குவமறிந்து அதன் மனதிற்குப் படக்கூடியதை அது கிரகித்துக் கொள்ளவும், கிரகித்துக்கொண்டதை நன்றாகத் தெளிவாய் அறிந்து கொள்ளவும் நாம் பழக்க வேண்டியது. இதற்கு சுபாவ வழி யொன்றே மிகச் சுலபமானது. இயற்கை விரோதமாகச் செய்யும் ஏற்பாடுகளெல்லாம் பயனற்றதாகும். இயற்கை வழி போவது எல்லாருக்கும் எளிது. செயற்கை வழி இயற்கை விதியை யொட்டியுள்ள மட்டுமே பயன்படும். இயற்கைவிரோதமாகவுள்ள செயற்கைவிதி பயன்பட மாட்டாது. குழந்தை மனம் விகாரமற்றது. அதில் கலப்பு கல்மிஷம் ஒன்றுமில்லை. காகிதம் வெளுப்பாயிருந்து எழுதும் குறியைத் தரித்து நிற்பதுபோல் குழந்தை மனமும் சுத்தமாயிருந்து புலன்வழி செல்லும் விஷயத்தோற்றங்களை ஸம்ஸ்காரமாகத் தாங்கி நிற்கும். இந்த ஸம்ஸ்காரங்கள்தானே ஸ்மரணை அல்லது ஞாபகரூபமாக வேணும் போதெல்லாம் உதித்தெழுந்து விசாரபுத்திக்கு வேண்டிய ஆதாரங்களை யுண்டுபண்ணும். விசாரபுத்திக்கு ஆதாரமாய் வேண்டியது விஷய ஞானம். விஷயஞானமில்லாவிட்டால் விசார புத்தியில்லை. விஷயஞானம் என்பது Knowledge of Sense Impressions. விசாரபுத்தி யென்பது Reason. குழந்தைமனம் விஷயப் பற்றினால் இழுக்கப்பட்டு விஷயானுபவத்தைக் கிரகிக்கும். இப்படி மனதினால் கிரகிக்கப்பட்டு ஸ்மரணை அல்லது ஞாபக ரூபமாய் சித்தத்தில் பதிந்திருக்கிற விஷயஞானம் விசாரபுத்தி யுண்டாவதற்கு இன்றியமையாதது. ஆகையால் குழந்தைகளுக்கு விஷயஞானமுண்டாகச் செய்ய வேண்டியது முக்கிய அவசியம். இதற்குப்பிரகிருதிவித்தை (Nature-Study) இன்றியமையாதது. இதை (Object-lessons) விஷயஞானபாடம் என்று சொல்லி குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுக்கிறார்கள். ஆனால் அப்படி சொல்லிக் கொடுக்கும் பெரியவர்கள் தாம் விசாரஞானத்தாலுணர்ந்ததை அவ்விஷயபாடப்பொருளின் மேல் ஏற்றுமல், குழந்தைகள் புலனுக்குத் தென்படுவதாகியவைகளையே குறிப்பிட்டு அவர்கள் தம் கவனத்தைச் செலுத்த வேண்டும். புலனறிவுக்கு எட்டாதவைகளைக் குழந்தைகளுக்குச் சொல்லி மனப்பாடம் செய்யப்பண்ணி அவர்கள் மனதைக் குழப்பி கிராஹியசக்தியைக் கெடுக்கக்கூடாது.

மனதுக்கு விஷயப்பற்று என்னும் ஆகர்ஷண சக்தியினால் விஷயங்களைத் தாவிப்பற்றி அவ்விஷயந்தானாக நின்று மாறும் சக்தியுண்டு. இப்படி மனதுக்கு சுபாவமாகவுள்ள தாவிப் பிடிக்கும் சக்தியை (Impulsive Power) என்று சொல்லுகிறதுண்டு. இதையே நாம் உற்சாகம் என்று சொல்லுகிறோம். மனதுக்கு உற்சாகம் உண்டாவது சகஜம். அந்த உற்சாக சக்தியைக்கொண்டு தான் நாம் குழந்தைகளுக்கு விஷயஞானம் கற்பிக்கவேண்டும்.

இதோ பிள்ளையைப் பெற்ற தாயார் தன் பசுங்குழவியை மடியில் வைத்து விளையாடிக் கொண்டிருக்கிறாள் பாருங்கள். குழந்தைக்கு இன்னும் மூன்று மாசமாகவில்லை. பச்சைப் பாலகனானாலும் அக்குழந்தை குதித்துக்குதித்து விளையாடுகிறதைப் பாருங்கள். அதோ தெரிகிற விளக்கு வெளிச்சம் குழந்தையின் கண்களின் வழியாக நேத்திரேந்திரியத்தில்பட அது மனதிற்பட்டு பிரகாசரூபத்தை "வாய்ந்த வுரு" வாகக்கொள்ளச் செய்கிறது. அதனாலுண்டாகும் மனவெழுச்சி குழந்தைக்குக் களிப்பையுண்டுபண்ணி தேஹத்தை யெழும்பி யெழும்பிக் குதிக்கச் செய்கிறது. இது மனதின் உற்சாகத்துக்கேற்ற தேகமுயற்சியாம். அது "அத்தா-இங்கா" என்று சப்தம் செய்து குதிக்கும் பொழுது தாயார் தானும் கூட உளமகிழ்ந்து அவ்வித சப்தம்செய்ய, அந்தச்சப்தம் காதின் வழியாகக் கரணேந்திரியத்திற் பட்டு மனதின் சப்தமாத்திரையைக் கிளப்பி துவனியாக ஒலிக்கச் செய்யக், குழந்தை அதனால் குதூஹலம் கொண்டு குதிக்கிறது. அது என்ன சப்தம் செய்கிறதோ அதைவிடத் திருத்தமான வார்த்தைகளைச் சொல்லி தாயார் சப்தம் செய்தால் அது குழந்தை மனதுக்கு விஷயமாகிறதில்லை. ஆதலால் அதைக் கவனிப்பதில்லை. குழந்தை செய்யும் சப்தம் போல் தாயார் துவனிசெய்து அகமகிழ்வோடு முகம் மகிழ்ந்து அக்குழந்தையைப்பார்த்தால் அது களுக்கென்று சிரிக்கிறது பாருங்கள். இது தான் குழந்தைகளுக்குப் போதிப்பதிலுள்ள மர்மம். இதற்கு அனுதாபசக்தி யென்பார்கள். அனுதாப சக்தியோடு மேலறிவும் கூடியிருக்க வேண்டும். மேலறிவுதானே தெய்விகபுத்தியாகும். (தெய்விகபுத்தி=Intuition).

தாயார் குழந்தையோடு விளையாடுவதைப் பார்த்துக்கொண்டிருந்த ஐந்து வயதுக்குழந்தை அப்பசும்பாலனோடு தாயைப்போல் தானும் அதன் பக்குவமறிந்து விளையாடி அதை மகிழச்செய்கிற விசேஷத்தைப் பாருங்கள். இந்த வித்தை அக்குழந்தைக்கு எப்படி வந்தது? இயற்கையமைப்பினால் அது தானாய் வந்தது. அப்படியென்றால், அறிவு ஒன்றேயாதலால் அறியும்சக்தியும் ஒன்று. ஆனால், அதன் கருவியாகிய மனசு இந்திரியங்களின் பக்குவாபக்குவம் அனந்தம் விதமாக மாறுபட்டு நிற்கும். இந்தப்பக்குவாபக்குவ பேதமறிந்து குழந்தை மனம் பூரிக்கப் போதிப்பதொன்றே சுலுபவழி. இயற்கை நீதியும் அதுவே. ஆகையால் தான்,

"சத்தியமே நன்மார்க்கம் தவறுவரும் மற்றெதிலும்,
வித்தையிதில் லாப மெத்த, விசுவாசம்மெத்தமெத்த"

என்று விவேகத்தாய் உண்மை யுணர்ந்தோதியுள்ளவாறு இதை யெல்லாரும் கைப்பிடியாகப் பிடித்தொழுகல் வேண்டும்.

---

## READINGS FROM THE BOOK OF NATURE.

### The Wondrous Working of the Heart.

### A Lesson in Nature Study.

"Medical science is now so far advanced that what appears to be miracles are possible—They make the heart itself take photographs—the electrical beat of your heart, the machanical beat, the pulse, and even the sounds made by your heart can be photographed—your heart can also be made to write a chart itself, to show how it is working before and after exercise.

"Every muscle when it contracts," said Dr. Strickland Goodall in a very interesting lecture at the Institute of Hygiene, "generates an electric current which starts at the point of contraction and travels along slightly in front of it. In the case of the heart, this current can be led off from the body to a galvanometer, and the deflection of it can be photographed." That is to say, a strip of sensitive paper is left exposed, and the heart of the patient in another room does the rest. It is really the heart itself that takes the photograph.

Dr. Goodall gives some rather alarming details of the work done by the heart under normal and abnormal conditions. "Every time the heart contracts it does enough work to raise a 2lb weight a foot high, or, in technical language, it does two foot pounds of work. When it is considered that the heart does this from 70 to 140 times per minute for years, some idea may be formed of the enormous amount of work the heart can do."—Dr. *Strickland Goodall's lecture before the Institute of Hygiene.*

## THE WONDROUS WORKING OF THE HEART.

### A Lesson in Nature Study.

### பிரகிருதி வித்யாம்சம்.

### ஹிருதயம் செய்வேலை விசித்திரம்.

ஹிருதயம் என்றால் இரக்தாசயத்துக்கு ஒரு பேர். அந்த ரக்தாசயத்துக்குள்ளே அதன் சக்திக்கு ஆதாரமாயும் உறைவிடமாயுமிருக்கும் அநாஹதஸ்தானமாகிய தஹராகாசத்துக்கும் அது பேர். தஹராகாசம் என்றால் சிறு ஆகாசம் அதாவது குறுகிய ஆகாசம். சிறு × அம்பலம் = சிற்றம்பலம் என்று ஆயிற்று.

இந்த இரக்தாசயமாகிய ஹிருதயம் ஸதா வேலை செய்து கொண்டேயிருக்கிறது. அது சுருங்கி விரிந்து இரண்டுக்கும் நடுவே சற்று இளைப்பாறி வேலைசெய்கிறது. லண்டன் சுகாதாரஸ்தாபன (Institute of Hygiene) சங்கத்தில் டாக்டர் ஸ்ட்ரிக்லாண்ட் கூடால் என்பவர் செய்த ஓர் உபந்யாஸத்தில் சில உண்மைகளை நிரூபித்துப் பேசினார். தேஹத்திலுள்ள தசை நரம்புகள் (Muscles) ஒவ்வொன்றும் சுருங்கி விரியும் சக்திவாய்ந்திருக்கிறது. அது சுருங்




கும்போதெல்லாம் மின்சாரம் உண்டாகிறது. அந்த மின்சாரசக்தி சுருங்கு மையத்திலிருந்துண்டாகி அதற்குச் சற்று முன்னிட்டுச் செல்வதாயிருக்கிறது. இரக்தாசயத்தின் தசை நரம்புகள் சுருங்கும்போது உண்டாகும் மின்சாரசக்தியின் ஓட்டம் தகுந்த உபாயங்களால்

தேஹத்திலிருந்து வெளியே வெகு. தூரத்தி லுள்ள மின்-சக்தி-மாத்ரை யந்திரத்துக்குக் (Galvanometer) கொண்டு போகப்படலாம். அங்கேயது ரக்தாசயம் செய்யும் வேலையைப் படமெடுத்ததுபோல் சித்தரித்துக் காட்டும். இந்த வேலை ஹிருதயம் தன்னால் தானே ஆகிறது. படம்பிடிக்கிறதற்காக உபயோகிக்கிற உருவமர்சக்திக் காகிதம் (Sensitive paper) ஒன்றை அந்த யந்திரத்தினுள் அமைத்து வைத்திருந்தால் அது இரக்தாசயத்திலிருந்துண்டாகும் மின்சக்தியிலிருந்து இரக்தாசயத்தின் படம் அதில் தோன்றும்படி செய்கிறது. இது உண்மையில் இரக்தாசயத்தின் படம் பிடித்ததுபோலவே யிருக்கிறது.

ஒரு மனிதன் பேசுகிற குரலைக் கேட்டவர்கள் மறுபடியும் அக்குரலிலிருந்து அந்த மனிதன் வரவை அவன் உருவத்தைப் பார்க்குமுன் மனதில் திட்டம் செய்துகொள்கிறதை தினம் அனுபவத்தில் காண்கிறோம். அதேமாதிரி,

"மின்னுருத்தானே தன்னுருக்காட்டும்."

மின்சாரம் தேஜோமயமானது. அதற்குரூப சக்தி இயல்பாயுண்டு. "ஆகாசத்திலிருந்து சத்தம் உதித்தாற்போலும், வாயுவிலிருந்து ஸ்பரிசம் உதித்தாற்போலும், தேஜஸ் (ஒளி) யிலிருந்து உருவேளி தானே உண்டாயமையும். அப்படியே நீரிலிருந்து ரசமும், நிலத்திலிருந்து கந்தமும் (வாசனையும்) உண்டாகிறது. இவையெல்லாம் சாஸ்திர உண்மைகள். சாஸ்திர விசாரத்தால் மட்டுமன்றி தகுந்த கருவிகளாலும் யந்திரங்களாலும் நிரூபித்துக்காட்டக் கூடியவை.

Unit of Work : வேலைசெய் மாத்ரையளவு

டாக்டர் கூடால் என்பவர் ஹிருதயம் செய் வேலையைப்பற்றி சில விவரங்கள் ஆராய்ந்துணர்ந்து திட்டமாய்த்தெரிவித்திருக்கிறார். அவருடைய சித்தாந்தத்தை வெளியிடுமுன் வேலையை அளக்கும் அளவை மாத்ரையைக்குறித்து ஒருவார்த்தை சொல்லவேண்டி யிருக்கிறது. ஒரு பவுண்டு கனமுள்ள வஸ்துவை ஒரு அடி உயரம் தூக்குவதற்கு வேண்டிய முயற்சிக்கு "ஒரு அடி பவுண்ட் வேலை" (One foot pound of work) என்று சொல்கிறது. இப்படித் தூக்குவதில் பூமியின் ஆகர்ஷண சக்தியை வெல்வதற்கான நேரெதிர் சக்தி உபயோகிக்கவேண்டியிருக்கிறது. (See article on 'Forces of Gravitation' in March No. for 1914) பூமைய ஆகர்ஷணசக்தி ஒரு பவுண் நிறையுள்ள வஸ்துவை இழுத்துக்கொண்டிருக்க, அதற்கு நேர் எதிராக அந்தச் சக்தியை வெல்வதற்கு வேண்டிய அளவு சக்தியை உபயோகித்தாலன்றி அந்த கனமுள்ள பதார்த்தத்தைத் தூக்க முடியாது. இரண்டு பவுண்ட் நிறையுள்ள வஸ்துவை ஒரு அடி உயரம் தூக்கவும், ஒரு பவுண்ட் நிறையுள்ள வஸ்துவை இரண்டு அடி உயரம் தூக்கவும் பிடிகக்கும் சக்திக்கு "இரண்டடி பவுண்டு" (2-Foot Pounds) வேலையென்று சொல்கிறது.

* * * *

## THE WORK OF THE HEART.

ஹிருதயம் செய்வேலை.

இப்பொழுது ஹிருதயம் செய்வேலையை இந்த அளவைக்கணக்குப்படி யெடுத்துக் குறித்து விளக்குவோம்.

இரக்தாசயம் (ஹிருதயம்) சுருங்கும் போதெல்லாம் இரண்டுபவுண்ட் நிறையுள்ள பொருளை ஒரு அடி உயரம் தூக்குவதற்கு வேண்டிய அளவு சக்தி உபயோகப்படுகிறது. அதாவது, அது "2-அடி-பவுண்டு வேலை (2 Foot Pounds of Work) செய்கிறது. இப்படி ஒரு நிமிஷத்துக்கு 70 முதல் 140 தரம் வரையில் சுருங்கிவிரிந்து வருஷக்கணக்காய் ஓயாமல் வேலைசெய்து வருகிற ஹிருதயம் எவ்வளவு வேலை செய்கிறதென்று பாருங்கள். ஒரு நிமிஷத்துக்கு 140-அடி பவுண்டு முதல் 280 அடி பவுண்டுவரை வேலைசெய்கிற தென்றால் ஒரு

பக்ஷத்தில் (15-நாளில்) அது அதைப்போல் 21,600 மடங்கு வேலை செய்யும். (21,600 என்பது மூச்சுக் கணக்கு). ஒரு தினத்துக்கு இவ்வளவு என்று கணக்குப் பார்ச்சாமல் ஒரு பக்ஷத்துக்கு இவ்வளவு என்று கணக்குப் பார்ப்பதால் ஹிருதயம் செய்வேலைக் கணக்கை மூச்சுக்கணக்கோடு பொருந்த அமைத்து ஆயுள் கணக்குப்பார்க்கும் முறைப்படி கணித்துப்பார்ப்பது இலகுவாகும். 60 நிமிஷம் கொண்டது 1-மணி (2½ நாழிகை); 60 மணி கொண்டது ஒரு ராசிமானம் (2½ நக்ஷத்திர நாள்); 6-ராசிமானம் கொனடது ஒரு பக்ஷம், இரண்டு பக்ஷம் கொண்டது ஒரு (சந்திரமான) மாசம்.

* * * *

## HEART-STRAIN.

மிதமிஞ்சின வேலையாலுண்டாகும் பிசகு

ஹிருதயம் நிமிஷத்துக்கு 60 முதல் 140 தரம் வரையில் சுருங்கி விரிகிறது என்று சொன்னோம். மிதமிஞ்சின வேலை பலவீனத் தைக்கொடுக்கும் என்பது சுபாவதர்மம். நிமிஷத்துக்கு 70 தரம் அடிக்கும் ஹிருதயம் அவ் வளவுக்கு மிஞ்சி நிமிஷத்துக்கு 156 தரம் அடித்தால் அப்பொழுது அதன் தசைநரம்புகளுக்கு அதிகமாய் பிசு ஏற்பட்டு ஆபத்துண்டாகலாம் என்பது சாதாரணம். இரக்தாசயத்தின் தசைநரம்புகளுக்கு அதிக பிசுவேறினால் அவை தாங்கமாட்டா. சென்னை ரோட்டில் டிராம்வண்டி போகிறதை ஓடிப்பிடிக்க வேண்டுமென்று ஒருவர் ஓடும்பொழுது அவர் ஹிருதயத்துக்குண்டாகும் வேலை எவ்வளவென்று கணக்கிட்டுப் பார்த்ததில் அவர் இரக்தாசயத்துக்கு எவ்வளவு அதிக வேலை கொடுக்கிறாரென்பது தெரியவந்தது.

ஆரம்பத்தில் நிமிஷத்துக்கு 76 தரம் அடித்துக்கொண்டிருந்த ஹிருதயம் அவர் ஓடிப்போய் டிராம்வண்டியைப் பிடித்தேறினதும் நிமிஷத்துக்கு 180 தரம் அடித்துக்கொண்டிருந்தது. அதாவது நிமிஷத்துக்கு 369 புட்-பவுண்ட்ஸ் வேலை செய்வதாகிறது.

எப்படி யென்றால், 360 பவுண்ட் நிறையுள்ள பளுவை நிமிஷத்துக்கு ஒரு அடி உயரம் தூக்கும் வேலை செய்து வருகிறது. அது டிராம்வண்டியை ஓடிப்பிடிப்பதற்கு முன் சாதாரணமாயிருந்த காலத்தில் செய்த 76-தரம் அடித்தல் அல்லது 142-புட் பவுண்ட்ஸ் வேலையைவிட இரட்டிப்பு மடங்குக்கு மேலாகிறது. 2¼ மடங்குக்கு மேலும் 2½ மடங்குக்குக் கீழ மாகிறது. திடீரென்று இவ்வளவு அதிக வேலையிட்டால் இரக்தாசயத்தின் தசைநரம்புகள் பிசுவேறிப் பங்கப்படக் கேட்பானேன்.

இப்படி பரபரத்து ஓடுவதால் மட்டுமன்று; கோபம், தாபம், சந்தோஷம், வெறி முதலிய மனோவிகாரங்களாலும் ஹிருதயம் அடிப்பது அதிகமாகித் துடிப்பு மேலிடக்கூடும். அடிப்பதற்கும் துடிப்பதற்கும் வித்தியாசமென்ன வெனில் முன்னதில் சுருங்கல் விரிதலாகிய இரண்டுக்கும் நடுவில் இளைப்பாறுங்காலம் அதன் களை நீங்குவதற்குப் போதுமானதாயிருக்கும். அடிப்பதின் வேகம் அதிகமாக ஆக இளைப்பாறுங்காலம் குறைகிறது. மூச்சுவிடுவதிலும் அப்படியே ரேசகபூரக கும்பகலக்ஷணங்களோடு கூடிய மூச்சு "ஓட்டம், பயம், ஆபத்து" அதிகரித்த காலத்தில் கும்பகம் குன்றி "இரைத்தல்" என்கிற குணம் ஏற்படுகிறது. இரைத்தல் அதிகப்பட்டால் மேல் மூச்சுவாங்கும். அதற்குச்சரியாக ஹிருதயமும் படபடவென்று அடித்துத்துடிக்கும். அதனால் இரக்தாசயத்துக்கும் மற்ற உறுப்புகளுக்கும் பலஹீனமுண்டாகும்.

* * * *

## "MENS SANA IN CORPORE SANO."

ஆயுராரோக்கிய திடகாத்திரம்.

ஆகையால் ஆயுராரோக்கியத்தை விரும்புகிறவர்கள் திடகாத்திரமாயிருக்க வேண்டும். திடகாத்திரமாயிருக்க மூச்சும் ஹிருதயமும் சரியாய் வேலைசெய்ய வெண்டும். சரியாய் வேலைசெய்வதாவது உசுவாச நிசுவாசம், அல்லது சுருங்கல்-விரிதல், இரண்டிற்கும் மத்தி

யில் கும்பகம் அல்லது இளைப்பாறல் முறைப்படி யேற்பட்டு வரல் வேண்டும். ஆதலால் தான் பிராமணக்குழந்தைகளுக்கு (ப்ரஹ்மத்தை அறிவதற்குப் பிறந்த குழந்தைகளுக்கு) 7-வயதில் உபநயனம் செய்து பிரஹ்மோபதேசம் செய்யவேண்டுமென்று ஸம்ஸ்காரம் ஏற்பட்டுள்ளது. அவர்களுக்குப் பிராணாயாமம் (மூச்சுவிடக்கற்று மூச்சையடக்கியாளும் வித்தை) காயத்ரீஜபம் இரண்டும் இன்றியமையாத சாதனங்களாம்.

பள்ளிக்கூடத்தில் படிக்கும் பிள்ளைகளுக்கு கஸரத்கூடம (Gymnasium) எப்படியோ அப்படிப் போன்றது பிராணாயாம வித்தை மனதையடக்க வேண்டிய வித்தைகற்பவர்களுக்கு. அலையுமனத்தை யடக்கியாளலே எல்லா வித்தைக்கும் முடிவான பலன். "கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்றார் ஔவையாரும்.

மனதும் சுவாஸமும் குதிரையும் லகானும் போல் சம்பந்தப்பட்டிருக்கிறது. மனதை யடக்கக்கற்றால் சுவாஸம் தானே வசியப்பட்டு வரும், "மன்மனமெங்குண்டு வாயுவமங்குண்டு." குதிரையை அடக்கியாளத்தெரிந்தால் லகான், சேணம் முதலிய உபஸாதனங்கள் தேவையில்லை. அது போல் மனதையடக்குவதற்கு, உள்ளபடி சரியாகச் சுவாஸம் விடப்பழகுதலும் ஹிருதயம் முறைதப்பாது வேலை செய்யப்பழகுதலும் இன்றியமையாத உபசாதனங்களாம். தேஹசுகத்துக்கும் இவை இன்றியமையாத சாதனங்களா யிருக்கின்றன. ஏனெனில் உலகத்திற்குக் காற்றும் நெருப்பும் போல், ஜீவதேஹத்துக்கு சுவாஸமும் ஹிருதயமும் சுருங்கிவிரிவது அவசியமா யேற்பட்டிருக்கின்றது. ஹிருதயம் தன் வேலையைச் சரிவரச் செய்யாவிட்டால் ரக்த ஓட்டமும் தாதுநடையும் தளர்ந்து நின்றுபோம். சுவாஸாசயம் சரியாக வேலை செய்யாவிட்டால் ரக்த பரிசுத்தம் குறைந்து தசை நரம்புகளுக்குள்ள சுருங்கி-விரியும் தன்மை குறைந்து மறைந்துவிடும். தசைநரம்புகள் (Muscles) பலம் குன்றினால் ஹிருதயம் சரியாக வேலை செய்யாது. இவ்விரண்டுக்கும் தேஹத்தில் ஆதாரமாயிருப்பது தஹராகாசத்திலுள்ள சுயஞ்சோதியாம் பரஞ்சுடரொளி. இந்த இடத்திலே தான் வாயுசக்தி ஓயாது விரிந்து குவிந்து அமர்ந்து 'தத்தோம்' (தத் + துவம் × ஓம்), ததிங்கணத்தோம்" (தத் + ஈம் + கண: + துவம் + ஓம்) என நடிக்கிறது. அது நடிக்க எல்லாம் நடைபெறுகிறது. இதையேபுறத்தில் "நடராஜ தரிசனம்" என்று சொல்லி வருஷத்திற்கொருதரம்ஐ திகமுறைபாக உற்சவம் நடத்திக் காட்டுகிறார்கள்.

---

## LORD HARDINGE'S BIRTHDAY.
## THE CHILDREN'S FESTIVAL.

### ஸ்ரீஹார்டிஞ்ச் ஜயந்தி.

குழந்தைகள்கோண்டாடும் மஹோற்சவம்.

1914-ம் வரு ஸ்ரீஹார்டிஞ்ச் ஜயந்தி யுற்சவம் ஸிம்லாவிலும் வேறு சில இடங்களிலும் மேமீ 18-உ யும் சென்னை முதலான வேறு சில இடங்களில் ஜூலை ஆகஸ்டு மாதத்திலும் கொண்டாடப்படும்.

சித்திரை-வைகாசி மாசங்களில் கோடைகாலத்திற்சாகக் கோர்ட்டுகளும் பள்ளிக்கூடங்களும் சாற்றப்பட்டிருப்பதால், குழந்தைகள் விடுமுறை காலத்தைக் கழிக்க அவரவர்கள் ஊருக்குப் போயிருப்பார்கள். போயிருந்தாலும் அங்கே பள்ளிப்பிள்ளைகள் ஒவ்வொருவரும் வீட்டில் விருந்துண்டு ஸ்ரீஹார்டிஞ்ச் ஜயந்தி கொண்டாடி வரவேண்டியது அவசியம். ஏனெனில் ஹார்டிஞ்சு பிரபு அவர்கள் குழந்தைகளுக்கு உண்மையான வித்யாதனத்தை வழங்கினவராவர். அவர் கல்கத்தாவிலிருக்கும் பொழுது "ஒற்றிற்றெரியா மறைப்புறத்தோர்துமென" மாறுவேஷம் பூண்டு, கல்கத்தாவிலுள்ள 'ஸ்டேண்ட்ஸ் ஹோஸ்டல்களில்'

வசிக்கும் பிள்ளைகளோடு தாராளமாய்க் கல ந்து பேசிப் பழகி அவர்களுடைய உள்ளக் கருத்தைஉள்ளபடி யறிந்துகொண்டதால், இந் தியாவில் வித்தியாபிவிர்த்தி விஷயமாய்ச் செய் யவேண்டிய சீர்திருத்தங்களைத்திருந்தச்செய்ய வேண்டுமென்று முயற்சி யெடுத்துக்கொண்டு பாடுபட்டு குழந்தைகளுக்கு குணமே பெரி தென்றும் அநுவித்திக்கச் செய்வதே வித்தி யாப்பியாசத்தின் முக்கிய நோக்கமாயிருக்க வேண்டுமென்றும் வற்புறுத்தி கவர்ன்மெண்டு தீர்மானம் ஒன்று பிறப்பித்தார். அதைப்பற்றி விவேகசிந்தாமணியில் விவரித்தெழுதியிருக்கி றோம்.

குழந்தைகள் தேசாபிமானம் குறையாமலி ருக்க வேண்டுமென்றும் அதற்காகச் சமஷ்டி சேவை சாதனங்கள் ஏற்படுத்தவேண்டு மென் றும் வற்புறுத்திக்கூறினர்.

அவருடைய சொந்தப்பிள்ளை பள்ளியில் படிக்கும் பொழுது அப்பையனோடு கூடிப்பழ கின வாசனையைக் கொண்டு எல்லாப்பிள்ளை களும் அவரவர்கள் உதித்த குலம் விளங்கப் பாடுபட்டுழைத்து நல்வழியில் விர்த்தியடைய வேண்டியதன்றி அவர்கள் தேசமும் அவர்க ளால் விளங்கி முன்னுக்கு வரும்படி உழைக்க வேண்டு மென்று தேசாபிமானத்தைப் போ ற்று முறையைச் சிலாகித்துப் பேசி அதற்குத் தக்க ஏற்பாடும்செய்யவேண்டுமென்றார். "இற் 'றைச் சிறியார் நாளைப் பெரியாராய்" இராஜ்ஜி யமே அவர்களால் பெருமைபெற்று விளங் கும்படியாகு மென்பதை யோர்ந்துணர்ந்து இராஜ்ஜியத்தின் யோகக்ஷேமத்தையும் அவர் கள் சிறுவயதுமுதலே கவனிக்கப் பழகி வர வேண்டுமென்றுத்தேசித்துத் தமக்கு நேர்ந்த ஆபத்துக்காலத்திலும் அவர்களை மறக்காமல் அவர்கள் க்ஷேமத்தையே மேலாகக்கருதி, தாம் ஆபத்துக்குத் தப்பிப்பிழைத்த போதும் தம்முடைய ஜன்மதின மஹோற்சவத்தைக் குழந்தைகள் களித்துக்கொண்டாடுவதே தன க்குத் திருப்தியென்று ஹார்டிஞ்சு ஜயந்தியை யுண்டுபண்ணி அதை யொரு நித்தியஸ்தாபன மாகச் செய்தார். இவர் பக்திசிரத்தைநிறைந்த வராதலால் குழந்தைகளும் பக்திசிரத்தைநிறை ந்தவர்களாய்த் தன்னயம் பாராட்டாது பரோப கார சிந்தை மிகுந்து ஊருக்குழைப்பதே உத் தமவழி யென்றுணர்ந்து, உணர்ந்தபடியொழு குபவராய் இளமையிற்றானே நற்பழக்கம் பெற்று வளரல் வேண்டுமென்பது அவருடைய பிரதம நோக்கம். அதற்கு அநுகுணமாக நடப்பதே ஸ்ரீஹார்டிஞ்ச்ஜயந்தி கொண்டாடுவ தின் நோக்கமாகும்.

சென்ற 1913-ஹூ ஜூன்மீ 17-உ பம்பா யில் ஸ்ரீஹார்டிஞ்ச் ஜயந்தி கொண்டாட வேற் பட்ட கமிட்டியார் உபாத்தியாயர்களை யெல் லாம் ஒருங்கு கூட்டி, மிஸ்டர் டி. ஏ. ஸாவேஜ் அக்கிராசனம் வஹித்திருக்க இந்த உற்சவ தினம் ஏற்பட்டதின் நோக்கத்தை விளக்கிப் பிரசங்கித்தார்கள். அப்பொழுது காரியதரிசி களில் ஒருவராகிய மிஸ்டர் தேவதார் அவர்கள் ஸ்ரீஹார்டிஞ்சு ஜயந்தியின்நோக்கத்தைப்பற்றி ஸ்வபாஷையில் விஸ்தாரமாய்ப்பேசினர். அக் கிராசனாதிபதியவர்கள் உண்மையைத்திரட்டி உள்ளபடியுரைத்ததில் ஸ்ரீஹார்டிஞ்ச் ஜயந்தி உற்சவதினமாக ஏற்பட்டது உபாத்தியாயர்க ளெல்லாரும்தங்கள் மாணுக்கர்களுக்குஸ்வதே சாபிமானம் உண்டாக, அவர்களெல்லாரும் இந் தியமாதாவின் பிள்ளைகள் என்று போதிக்க வேண்டுமென்றும், மற்ற வித்தியாசங்கள் என்ன ஏற்பட்டிருந்தாலும் ஸ்வதேசம் ஒன் றேயாதலால் க்ஷேத்திர பாத்தியதை கொண்டு ஒரு வயிற்றுப்பிள்ளைகள் போல் சகோதர வாஞ்சை பாராட்டி ஒற்றுமையாய் வாழ்ந்து ஒருவரை யொருவர் நேசித்திருக்க வேண்டும் என்றும் வற்புறுத்திக்கூறினர்.

இந்தியாவில் க்ஷேத்திரம், தீர்த்தம், மூர்த்தி யென மூன்றும்பூஜிக்கத்தக்கபொருள்களாம். க்ஷேத்திரம் என்பது மாத்ருஸ்தானம்; தீர்த் தம் என்பது பிராணாதாரமாயிருப்பது பற்றி பித்ருஸ்தானம்; மூர்த்தியென்பது புத்திரஸ்தா

னம்; இக்கொள்கை ஆதிகாலந்தொட்டுள்ளது. க்ஷேத்திர த்தியானம் தேசாபிமானத்தையுண்டு பண்ணும்; தீர்த்தத்தியானம் தேசாபிமானத்துக்குப் பிராணாதாரமாயுள்ள ஸமஷ்டி சேவைக்குக் காரண்மான பரோபகாரசிந்தையை உண்டுபண்ணும்; மூர்த்தித்தியானம்பாலபோத சிக்ஷாஞானத்தை யுண்டுபண்ணி க்ஷீராப்தியில் ஆலிலைமேல் பள்ளிகொண்டிருக்கும் அற்புதக் குழந்தையைப் பூஜிக்கவேண்டிய மனோபக்குவத்தை யுண்டுபண்ணும். இப்படிப்பட்ட தியானம் செய்து பாவசமாதியில் பூர்ணஜ்ஞர்களான ருஷிகள் தாமே இந்தியா மாதாவின் உண்மைக் குழந்தைகளாவர். நாமெல்லாம் அவர்கள் வழிபற்றிப் பூஜை செய்து கடைத்தேற வேண்டியவர்களாயிருக்கிறோம். இந்தவுண்மையை லார்ட்ஹார்டிஞ்சவர்களும் அவருடைய தர்மபத்னியாகிய லேடிஹார்டிஞ் சவர்களும் அவர்களுடைய பரஞானசிந்தையாலும் குழந்தைகளைத் தெய்வமாகக் கொண்டாடும் பக்தி சிரத்தை விசேஷத்தாலும் நமக்குக் கரதலாமலகம்போல் காட்டி யுதவினார்களாதலால், அதுகாரணம் பற்றி அவர்கள் இவ்வித அபூர்வ பக்தி சிரத்தை காட்டுவதற்கு ஆஸ்பதமாயிருந்த ஆபத்திலிருந்து அவர் தப்பிப்பிழைத்ததை ஒரு அடையாளமாகக்கொண்டு அவர்கள் காட்டிய உத்தமகுணவைபவங்களைச் சிந்தித்து அந்த குணவிசேஷம் நம்மனதிற் பதியும்படி உற்சவங் கொண்டாடக் கடமைப்பட்டிருக்கிறோம். இதுதான் "ஸத்ஸங்க ஸஹவாஸம்" என்று சொல்கிற அதியுத்தமமான ஸன்மார்க்க ஸாதனம.

வரகவி டாக்டர் ரவீந்திரநாத்டாகோர் அவர்களுடைய சகோதரராகிய மிஸ்டர் அவனீந்திரநாத் டாகோர் அவர்கள் இந்தியாவை க்ஷேத்திர மாதாவாக உருவகப்படுத்திப் பூஜிக்கச் சாதனமாக ஒரு படம் எழுதியுள்ளார்.

இவ்விவேகசிந்தாமணியில் தானே "பாரதீ மாதா" படமொன்று அனுபந்தமாகப் பிரசுரித்துள்ளோம். இப்பொழுது குழந்தைகள் அரசர் பிரதிநிதிக்குக் கொடுக்கும் அன்பார்ந்த சின்னமாக பூர்வமாயுள்ள ஸமஷ்டியானை யுருவத்தில் இந்தியாவை க்ஷேத்திரமாயும் க்ஷேத்திரமாதாவை வித்யாலக்ஷ்மியாகவும் சித்தரித்துக் காட்டி "கஜநாயகி" அல்லது "கஜேந்திர லக்ஷ்மி" என்கிற வித்யாலக்ஷ்மி படமொன்று சித்தரித்துக்காட்டியிருக்கிறோம். அதை ஆயிரக்கணக்காக அச்சிட்டுவழங்க அரசர்பெருமான் தான் பொருளுதவி செய்யவேண்டும். அப்படி யொருவர் முன்வரும் வரையில் குழந்தைகள் பார்த்து மனங்களிக்க வென்று ஜால விளக்குப் படமாக அதைச்சித்தரித்துக்காட்ட ஒரு நண்பர் இசைந்திருக்கிறார்.

இம்மாதிரிசித்திரங்கள் ஜனசமஷ்டியின்யோகக்ஷேம வைபவங்களைச் சரித்திர வாயிலாகவுணர்வது கஷ்டமென்று சித்தரித்துக்காட்டுவதற்காக ஏற்பட்டவை. இங்கிலாந்தில் பார்லிமெந்து சபைக்கட்டடங்களிலுள்ள சித்திரங்களும் மாஞ்சஸ்டர் டவுன் ஹாலிலுள்ள சித்திரங்களும் இவ்விதமானவைகளாம். அப்படியே நமதுகோயில்பிரகாரங்களிலுள்ளசித்திரங்கள் நமது தேசத்தின் யோகக்ஷேமவைபவங்களை விளக்கிக்காட்டுபவையாக விருக்கின்றன. அவ்வித சித்திரங்களில் தற்காலத்து நாகரிக சம்பந்தமான விஷயங்கள் ஒன்றும் சேராமலிருக்கிறது. அக்குறையை நிவர்த்திக்க வென்று பூர்விகமாயுள்ள சமஷ்டியானைச் சித்திரத்தில் இந்தியாவை க்ஷேத்திரமாகவும் இந்தியாமாதாவை க்ஷேத்திரதேவதையாகவும் காட்டி ஸமஷ்டி வித்யாபழத்தை அத்தேவதை கையில் வைத்துக்கொண்டிருக்கக் குழந்தை அதைக்கொடுக்கச்சொல்லிக் கேட்கும் பாவனையாக எழுதியிருக்கிறது. இதை நமது நாட்டுக்கோட்டை செட்டிமார் கோயில்கட்டுகிற தர்மத்தில் முக்யமான தொன்றாக திவ்யஸ்தல மொன்றில் தீர்த்தக் கரையில் அல்லது கோயில் ஸந்நிதானத்தில் நிர்மிப்பார்களானால் ஸ்ரீநிவேதிதையம்மனுடைய மனோரதம் போல் அது ஜனங்களுக்கு ஸமஷ்டிசேவை ஞானத்தைப் புகட்டி அளவற்ற நன்மையைச் செய்யும்.

## "SOCIAL SERVICE INSTITUTE."

### ஸமஷ்டி-ஸேவை ஸாதனம்.

### வித்தைபயிலு முறை.

---

### ஆயுள்வேத பாஸ்கரன்.

இந்திய நாட்டின் வடக்கிலே சிந்தியத்திற்கிப்பால் விந்தியத்திற்கப்பால் இராஜக்கிரகம் என்றொரு தேசமுளது. அதனை நெடுநாள் முன்னர் பிம்பிசாரன் என்னும் அரசன் ஒருவன் அரசியல் வழுவாது செங்கோல் செலுத்தி ஆட்சிசெய்துவந்தான். அவனுக்கு அஜாதசத்துரு, அபயன், ஜீவககுமாரபந்தன் என்னும் பெயர்பெற்ற மூன்று புத்திரர்களுண்டு. மூவரில் மூத்தவனாகிய அஜாதசத்துரு என்பவன் பட்டத்திற்கு உரியவனாதலின், ஏனையிருவரும் தாந்தாமொரு கைத்தொழில் கற்று உய்தல் வேண்டுமே என்று எண்ணியிருந்தனர்.

இரண்டாவது குமாரனாகிய அபயன் அரசனிடத்தில் அக்கருத்தை அறிவித்துக் கம்மியத் தொழிலில் வியமிய ஒருவனை அடைந்து அத்தொழில் பயில்வானாயினான். இளையவனாகிய ஜீவககுமாரபந்தன் இராசனிடம் சென்று தன் உள்ளக்குறிப்பை உணர்த்தினான். உடனே பிம்பிசாரன், "ஆயின், ஜீவகா! நீ எத்தொழில் கற்க விரும்புகின்றாய்?" என்று கேட்டான். மைந்தன், "அண்ணா! ஆயுள்வேதம், ஆராய ஆசை கொண்டுள்ளேன்" என்று கூறினான். அரசனும் அங்ஙனே செய்க என்று பணித்தான்.

ஜீவககுமார பந்தன் ஆயுள்வேதியரை அடைந்து, மருத்துவநூல் நுணுக்கங்களைக் கூர்ந்து உய்த்துணர்வானாகி மிகத் தேர்ச்சியடைந்தான். அதன் பின்னர், ஆயுத சிகிச்சையில் சிறந்தவனாகியும் கபாலந்திறக்குஞ் சிகிச்சையொன்றுமே கைவந்திலனாகித் தந்தையிடம் அடைந்து, "தந்தாய்; கற்க கசடறக் கற்பவை" என்றது வேதம். அடியேன் ஆயுள்வேதத்தை ஆராய்ச்சி செய்து அரிய பெரிய சிகிச்சைகள் பல கற்றேன். கபாலத்தைத் திறந்து சிகிச்சை செய்வதை அறிந்தாலொழிய என் பாண்டித்தியம் பூர்ணபாண்டித்தியமாகாது. இக்குறை ஒழிந்தாலொழிய என் மனமும் அவா அடங்காது. ஆகவே இதனை எவ்விதத்திலாயினும் கற்றுத்தீர வேண்டுமென உறுதிகொண்டேன். இந்த வித்தையில் கைபோனவர் ஆத்திரேயர் என்னும் ஆயுள்வேதியர் பெருமான் ஒருவரேயாவர். அவர் தக்ஷசீலம் என்னும் திருப்பதியிலே எழுந்தருளி யிருக்கின்றார். அவரை அடைந்து வழிபட்டு அவ்வித்தை அறிந்து வரும்பொருட்டாக அடியேனுக்கு விடை தந்தருள்க" என்று வேண்டினான். அரசனும் அதற்கு இசைந்து தக்ஷசீலத்தின் மன்னவனாகிய புஷ்கரபூபதிக்கு "என் அருந்தவச் செல்வனாகிய ஜீவகன் என்கின்றவன் ஆசிரியர் ஆத்திரேய ரிடத்தில் ஆயுள் வேதத்தின் சூக்ஷ்ம மர்மங்களை அறியவேண்டிவருகின்றான். ஆதலின் அவனுக்குச் செய்வன செய்க" என்று கடிதம் போக்கினான்.

ஜீவகனும் தந்தைபால் விடைபெற்றுக் கொண்டு அங்கு நின்றும் புறப்பட்டு வழிநடந்து சிலநாள் சென்றபின் தக்ஷசிலஞ் சேர்ந்து புஷ்கரனைக்கண்டான். புஷ்கரனும் ஜீவகனை வழிநடந்த இளைப்பாற்றி நீராட்டிச் சிராட்டிச் சிறப்புப்பலசெய்து அழைத்துக் கொண்டுபோய் ஆத்திரேயர் முன்னிலையில் விடுத்து, "ஐயீர்! கண்டீர். இவனாகின்றவன் மன்னர் மன்னன் பிம்பிசாரன் மக்கள் மூவரில் இளையவன். இவனை ஜீவககுமாரபந்தன் என்பர். மருத்துவ நூலில் மிக்க உழைப்புள்ளவன். மண்டை ஓட்டைத்திறக்கும் சிகிச்சை ஒன்றனையும் தேவரீர்பால் உபதேசிக்கப் பெறும்படி பாவம் இத்தனை தூரம் வந்தடைந்தான். இவனைப்பற்றி அடியேன் இன்னும் சொல்லத் தகுவதொன்றுமில்லை. இச்சிறுவனைத் தங்கள் தலைமகனாகக்கொண்டு இவன் மீது ஒரு கண்மலரைச் சாத்தியருளல் வேண்

டும். அடியேனுக்குச் செலவு கொடுத்தருள்க" என்று சொல்லி விடைபெற்றுச் சென்றான். ஜீவககுமாரனும் ஆசிரியர்க்கு உள்ளங்குளிர வழிபாடென்னப்படுவன வெல்லாம் ஒன்றொழியாமல் நிறைந்த அன்புடன் செய்துவந்தான். ஆசிரியரும் "ஆ! ஆ! மாணாக்கன் என்றால் இவனுக்கேதகும்; நமது நிழலைப்போல்கின்றான். குளிருக்குத் தீக்காய்வாரையும் போல்கின்றான். நமக்குக் கைவந்த வித்தையை இவனுக்கு அங்கை நெல்லியாய்க்காட்டிக் கொடுத்தல்வேண்டும்" எனத் திருவுளங்கொண்டு குளிரக்கடாக்ஷித்து வந்தார்.

ஜீவகன் தன்னுடைய ஆசிரியர் கூறுவது கூறுமுன்னரே ஏகசந்தக்கிராகியாய்ப் பாடங்கொள்ளும் சூக்ஷ்மசுபுத்தியுடையனாயிருப்பதைக்கண்ட ஆத்திரேயர் அடங்காத ஆநந்தங்கொண்டவராகித் தாம் நோயாளரைப் பார்க்கப் போகும்போதெல்லாம் அவனையும் உடனழைத்துச் செல்வாராயினர். இங்ஙனம் ஒழுகும்போது ஒருநாள் ஆத்திரேயர் ஒரு நோயாளனைக்கண்டு நாடி பரீக்ஷை செய்து இன்னமருந்து உட்கொள்வது என்று திட்டப்படுத்தி விட்டுத் தமதிருப்பிடம் சென்றடைந்தார். அதுகண்ட ஜீவகன் "இந்நோயாளன் இம்மருந்தினை உட்கொண்டால் இன்றைக்கே இறப்பது திண்ணமாகும். இப்போது இதைச் சொன்னால் ஆசிரியர்மேல் குற்றங்கூறுவதாகும். என்ன செய்யலாம் என்று எண்ணிக்கொண்டே ஆசிரியருடைய இருப்பிடம் சேர்ந்தபின், வேறுகாரியமாகப் போகிறதுபோல நோயாளனுடைய வீட்டை மீண்டும் அடைந்தான். அடைந்து 'பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்குமெனின்' என்னும் வேதவாக்கியமே துணையாக உபாயம் ஒன்று செய்தான். பிணியாளனிடம் அதிக விரைவாக வருவதுபோல நடித்து "வைத்தியர் முன்னர்க் கூறியமருந்தினை உட்கொள்ள வேண்டாமென்று எச்சரிக்கைப்படுத்தி இம்மருந்தையே உட்கொள்ளும்படியாகத் தங்களிடம் ஓடோடியும் சென்று கூறிவா என்று சொல்லியனுப்பினர், எச்சரிக்கை!" என்று திட்டப்படுத்தி வந்துவிட்டான். வந்தவன் இது செய்தியை ஆசிரியரிடம் சொல்வது தற்புகழ்ச்சியாகுமே என்று நினைத்து சும்மா இருந்துவிட்டான். நோயாளியும் ஜீவகன் சொல்லிக் கொடுத்த மருந்தை உட்கொண்டு முன்னிலும் நோய் பதின்மடங்கு தணிந்து இலகுவாய் எழுந்து உலாவிக் கொண்டிருந்தான். மறுநாள் ஆத்திரேயர் போய் அந்நோயாளனைக் கைபிடித்துப்பார்க்க அவன் முன்னிலும் ஆயிரமடங்கு நோய்தணிந்து இலகுவாய் எழுந்துலாவ சக்தி உடையவனாயிருத்தலைக்கண்டறிந்து "குணமது கைவிடேல்" என்பதற்கிசைய "அம்மருந்தையே இன்னும் இரண்டொரு வேளை உட்கொண்டாயானால், உன் நோய் பரிஷ்காரமாகப் போய்விடும்" என்றுசொன்னர். அப்போது அந்த வியாதிபஸ்தன் "முன்னே தாங்கள் கொடுத்தீர்களே அதுவா அல்லது பின்பு ஜீவகன் கையில் கொடுத்தனுப்பினீர்களே அதுவா? என்று கேட்டான். கேட்கவே, ஆத்திரேயர் கலக்கமெய்தி "முன்னர் என்னகொடுத்தேன்? அப்புறம் என்ன கொடுத்தனுப்பினேன்? காட்டு என்ன, அவனும் அவற்றை எடுத்துக்காட்ட ஆசிரியர் "அடடா! மதிமோசம் போனேன். அந்தமட்டில் ஜீவகன் இவன் ஜீவனைப்பிழைக்க வைத்தான். வைத்தியருக்கு எப்போதும் சமயோசிதமான புத்திநுட்பம் இருக்கவேண்டும்" என்று நினைத்து, "ஜீவகன் கொண்டுவந்த மருந்தையே உண்பாய்" என்றார். அதுமுதல் ஆசிரியர் ஜீவகனைத் தம்மரிய உயிராக எண்ணித் திருவருள் பாலித்து வந்தார்.

ஆசிரியர் ஆத்திரேயரிடத்தில் ஜீவககுமாரனேயன்றி அனேக பிராமணச்சிறுவர்களும் சிஸ்ருஷை செய்து சிகிச்சைநூல் கற்று வந்தனர். ஆத்திரேயர் ஜீவகன்மீது அன்புகொண்டிருப்பதைக்கண்டு பொறாதவர்களாகி

பார்ப்பனச் சிறுக்கர்கள் ஆசிரியரை அடைந்து "சுவாமீ! அடியோங்களும் தங்களை வழிபட்டுப் பிழைக்க எண்ணியிருக்கும் சிஷியர்களல்லவோ? உமக்கு எங்களைக் காட்டில் அவனிடம் உள்ள சிறப்பு என்ன. அவனுக்கு மாத்திரம் அகிலவித்தைகளையும் அதிக பிரீதியுடன் கற்பிக்கின்றீர்களே; இது தகுமோ?" என்று விண்ணப்பித்தார்கள். அதுகேட்ட ஆசிரியர் 'மாணுக்கர்களே! கேளுங்கள். நான் எல்லோரையும், ஒரு கண்ணிலே பார்ப்பவன். நீங்கள் இப்படிக் குறை கூறுவதைக் கேட்க எனக்கு மனம் நோகின்றது. உங்களெல்லோரையும் ஒருங்கே என்முன்னிலையில் வைத்துக்கொண்டுதானே மருத்துவம் கற்பிக்கின்றேன். அவனைமாத்திரம் அதிக ரகசியமாய் வேறிடத்தில் வைத்துக்கொண்டு கற்பிக்கின்றேனு? இல்லையே! அவன் ஏகசந்தகிராகியாய் இருக்கின்றான். யாதொன்றையும் குறிப்பினுல் அறிந்துகொள்ளும் நுண்ணறிவு உடையவனுக இருக்கின்றான. அது என்னுடைய குற்றமல்லவே!" என்று சொன்னுர். அது கேட்ட பார்ப்பனப்பிள்ளைகள் "எங்களுக்கில்லாத புத்திகூர்மை அவனிடத்தில் மாத்திரம் அதிசயமாக என்ன கண்டீர்?" என்று கேட்டார்கள். அதற்கு அவ்வாசிரியர் "நல்லது இது காரியத்தை உங்கட்கு நான் அதிசீக்கிரத்தில் ரூபிக்கிறேன். அது வரையில் பொறுங்கள்" என்று சொன்னுர்.

மாணுக்கர்களை ஒவ்வொருவனுக அழைத்து மருந்துக் கடைக்குப்போய் ஒவ்வொரு சரக்கின் விலையை விசாரித்தறிந்து வரும்படி அனுப்பினுர். பிராமணப்பிள்ளைகள் ஆசிரியர் தத்தம்மை வேண்டிய அந்தந்தச் சரக்கின் விலையை மாத்திரம் கேட்டறிந்து வந்தனர். ஜீவகன் பற்பல சரக்குகளின் விலையையும் கேட்டுக்கொண்டு வந்தான். அனைவரும் வந்து சேர்ந்தபிறகு ஆசிரியர் அவனவனைத் தாம் வேண்டின பொருளையன்றி மற்றும் ஒவ்வொன்றின் விலையைக் கேட்க அவனவன் "தாங்கள் கட்டளையிட்டதை மாத்திரம் விசாரித்து வருவது கடமையென்று அதன் விலையை விசாரித்து வந்தேன்: வேண்டுமானுல் மறுபடியும் போய் இப்போது வேண்டின சரக்கின் விலையை விசாரித்து வருகிறேன்" என்றுசொல்ல, ஜீவகன் மாத்திரம் எவ்வெந்த சரக்கின் விலையைக் கேட்ட போதிலும் பளிச்பளிச்சென்று பதில் சொல்லிவந்தான்.

ஆசிரியர் பின்னுமொருமுறை ஜீவகன் ஆற்றலை† அச்சிறுவர்களுக்குச் செம்மையாக விளக்க வேண்டுமென்றெண்ணி அனைவரையும் நோக்கி, "அதோ காண்கின்ற குன்றத்தையடைந்து அந்நின்றும் ஒஷதி‡யல்லாததொன்றைக் கொண்டுவாருங்கோள் பார்ப்போம்" என்று ஏவினுர். சிறுவர்களும் "அங்ஙனமே" என்று ஏகினுர். ஏகினவர்கள் அங்கு சென்று அக்குன்றினை ஆராயத் தொடங்கினுர்கள். அவனவன், எது எதனை ஒஷதியல்லவென்று நினைத்தானே அவ்வதனைக் கையில் எடுத்துக் கொண்டுவந்தான். ஜீவகன் ஒரு கோரையைக் கிள்ளிக்கொண்டு வந்தான். இவர்கள் வருகின்ற வழியில் அந்தணச் சிறுவர்கள் ஒரு யானையின் அடிச்சுவடுகளைக்கண்டு அவைகளை உற்றுப்பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஜீவகன் அவர்களை அணுகி "என்ன பார்க்கின்றீர்கள்? நானும் சற்று பார்க்கட்டும்" என்று எட்டிப்பார்த்துச் சுற்றிவளைத்து நோக்கிச் சாவதானித்து "ஐயமார்களே! இவை ஒரு பெண்யானையின் அடிச்சுவடுகள், அந்த யானையும் வலக்கண்குருடு: இன்றைக்குக் குட்டி போடும். அதுவும் ஆண்குட்டி, அந்த யானையின் மேல் ஒரு பெண்பிள்ளை ஏறிக் கொண்டுபோனுள். அவளுக்கும் வலக்கண் குருடு: அவளும் கருப்பவதி: இன்றைக்குப் பிள்ளை பெறுவாள்" என்றுன். பிராமணச் சிறுவர்கள் அனைவரும் "இந்த ஜீவகன் என்னடா! சித்திரம் பேசுகிறுன், நாமெல்லாரும் ஒன்ருகத்தானே வந்தோம்; பெட்டையானை

† ஆற்றல் = திறமை. ‡ஒஷதி = மருந்து சரக்கு.

யாம்: அது குட்டிபோடப்போகிறதாம். அதன் மேலும் ஒரு பெண்பிள்ளையாம்; அவளும் பிள்ளை பெறப்போகிறளாம்; நம்மிடத்தில் அண்ட மளக்கிறுனே" என்று கைகொட்டிச் சிரித்து பரிகாசஞ்செய்துகொண்டே வழி நடந்து வந்து ஆசிரியரிடம் சேர்ந்தார்கள்.

ஆசிரியர் அப்பார்ப்பனச்சிறுவர்கள் கொண்டுவந்த பச்சிலைகளைநோக்கி ஒவ்வொன்றாக "இது வயிற்று வலிக்காகும்; இதனால் தலைவலி தீரும்; இதுகட்டிகளின் மேல் வதக்கியிட உதவும்: இது கஷாயமிட்டுக்கொடுக்க ஜன்னிபாதத்தைத்தொலைக்கும்; இது சுவாசகாசத்தைக் கண்டிக்கும்: இது குஷ்டநோய் போக்கும்" என்றிப்படியாகக் கழித்துவந்து "இவைகளெல்லாம் ஒஷதிகளே ஆகின்றன" என்றார். பின் ஜீவகனை நோக்கி "நீ கொண்டுவந்த தென்ன? காட்டு, பார்க்கலாம்" என்று கேட்க, ஜீவகன் "குன்றுமுழுதும் திருவித்திரிந்தேன் கண்டன கண்டனவெலாம் ஒவ்வோர் நோய்க்கு மருந்தாகும் ஒஷதிகளாகவே இருக்கின்றன. வெறுங்கையாக வருவதும் சாமர்த்தியமல்லவே. ஒஷதியல்லாத தொன்றைக்கொண்டுவர வேண்டுமே. இந்தக்கோரையைக் கொண்டு வந்தேன்" என்று சொல்லிக் கோரையைக் காட்டினான். ஆசிரியர் "இதனாலாகும்பயன் என்னை?" என்றுகேட்க, ஒருவனைத் தேள் கொட்டினால் இந்தக் கோரையினால் வேது பிடிக்கலாம்" என்று சொன்னான். உடனே ஆசிரியர் புன்னகை செய்தார். அது கண்ட பிராமணச்சிறுவர்கள், ஜீவகன்மேல் வெறுப்புக் கொண்டவராய் ஆசிரியர் நகையாடினர் என்று நினைத்து, "ஐயீர்! இவன் திறத்தை இவ்வுளவுதானென்று நினைத்தீர்களோ! நாங்கள் வந்துகொண்டிருக்கும்போது வழியில் ஒருயானையின் அடிச்சுவடுகளைக் கண்டோம். இந்த அறிவாளன் அவை ஒரு பெண்யானையின் சுவடுகளென்றும், அந்த யானையும் வலக்கண்குருடு, இன்றைக்குக் குட்டிபோடுமென்றும்; அந்த யானையின்மீது ஒருபெண் பால் சாரிபோயினள், அவளும் வலக்கண் குருடு, கருப்பவதி, இன்றைக்குப் பிள்ளைபெறுவாள் என்றும் பிரத்தியக்ஷமாகக் கண்டதுபோல விசித்திர வார்த்தைகள் பேசினன்" என்று சொன்னார்கள்.

இதையெல்லாங் கேட்ட ஆத்திரேயர் "அப்பா! ஜீவகா! இதெல்லாம் மெய்தானா?" என்று வினவினர். அதன்மேல் ஜீவகன்: "ஆம் சுவாமி" என்றான். அதன்மேல் ஆசிரியர் "அடிச்சுவடுகளால் ஆண்யானை அல்லது பெண்யானை என அறிவதெப்படி?" என்று கேட்டார்.

ஜீவகன்: "சுவாமி! ஆண்யானையின் அடிச்சுவடுவட்டமாயிருக்கும். பெண்யானையின் அடிச்சுவடு நாற்கோணமாயிருக்கும்" என்று விடைகொடுத்தான்.

ஆசாரியர்: "அது வலக்கண்குருடென்று எங்ஙனம் அறிந்தாய்?"

ஜீவகன்: "சுவாமி! அது இடப்பக்கத்திலுள்ள புல்லைமாத்திரம் மேய்ந்திருக்கிறது."

"அந்தயானை கருப்பம் கொண்டதென்று எப்படி அறியப்பட்டது?"

"அதன் காற்சுவடு ஆழமாய் அழுந்தியிருந்தது."

"அது ஆண்குட்டி போடுமென்று எப்படி தெரியவந்தது?"

"வலப்பக்கத்துக் காற்சுவடு நன்றாய் குழிய ஊன்றியிருந்தது."

"அந்த யானையின்மீது ஒருபெண் ஏறியிருந்தாள் என்பது என்ன நிச்சயம்?"

"அவள் வழியில் இறங்கி நடந்திருக்கிற காற்சுவடுகளைக் கண்டேன்."

அவளுக்கு வலக்கண்குருடு என்பது எப்படி துணியப்படும்?"

"அவள் இடப்பக்கத்திலுள்ள பூக்களை மாத்திரம் கொய்திருக்கிறாள்"

"அவள் கருப்பிணியாவதெப்படி?"

"அவளுடைய குதிகால் தரையில் செம்மையாய்ப் பதிந்திருக்கிறது" என்று சொல்லிப் பின்னும் "ஐயரே ! ஈதெல்லாம் உண்மை. இவைகளை அடியேன் அநுமானப் பிரமாணத்தால் அறிந்தேன். தாங்கள் உண்மை தெரிய வேண்டினுல் என்னேடு சற்றும் இவர்களில் ஒருத்தனைச் சத்திரஞ்சென்று விசாரித்துவரும்படி செய்யுங்கள்." என்று சொன்னுன். பிரத்தியக்ஷத்தில் அப்படியே பரீக்ஷித்துப் பார்க்கையில் எல்லாம் அவன் சொன்னது சொன்னது போலவே நடந்திருந்தன. அதுமுதலாக பார்ப்பனச்சிறுவர்களும் இவன்மீதுகொண்ட பொருமையை ஒழித்து ஒருமைப்பட்டிருந்தார்கள்.

ஜீவகனும் கபாலந் திறப்பது தவிர மற்ற எல்லாம் ஐயந் திரிபின்றிக் கற்றுணர்ந்தவனுகிக் காலங்கழித்து வருகையில், ஒருநாள் தீராத் தலைநோய் கொண்ட ஒருவன் ஆத்திரேயரை யடைந்து "ஐயா! ஆயுள் வேதியரே! எந்தநோய் கொண்டாலுங் கொள்ளலாம். அப்பப்ப! தலைநோய் பொல்லாதது. தலைநோயிலும் என் தலைநோய் தீராத தலைநோயாக இருக்கின்றது. எத்தனை வைத்தியர்களைக் கட்டிக்கொண்டழுதேன். எவ்வளவு பணம் விரயஞ்செய்தேன். ஐயோ பாழாய்ப்போன அந்த எமதர்மராஜன் என்றைக்குத்தான் என் வட்டை எடுத்துக் கிழிப்பானே! தங்களைப் பற்றி வெளித்தேசங்களில் வெகுசிறப்பாகச் சொன்னுர்கள். தாங்களும் கையை விரித்துவிட்டால் என்கதி அதோகதிதான். "இறுமுயிர்க்கும் ஆயுள் மருந்தொழுக்கல் தீதன்ருல்" என்பார்களே. கடைமுறையாகத் தங்கட்குக் காட்டிவிடுகிறது: தாங்களும் அஸாத்தியமென்ருல் ஆருயிரை மாய்த்துக் கொள்வதென்று துணிவுகொண்டு வந்துவிட்டேன். மக்களும் மனையுமாக இருப்பவன். அடியேன் மீது கிருபா கடாக்ஷம்பண்ணி பிராணபிச்சை கொடுக்கவேண்டும், என் அப்பனே!" என்று சொல்லி வருந்தினுன். அதுகேட்ட ஆத்திரேயர் அந்த நோயாளனைத் தலையைத் தடவிக் கொடுத்து "தம்பி! அஞ்சாதே, படுவது பட்டுத்தானே தீரவேண்டும். உன்னுடைய கிரகசாரம் நாளையோடு ஒழிந்துபோகிறது. நீ ஒரு கொட்டாரத்திலே ஒரு குழிதோண்டி அதி னிறையச் சாணநீரை ஊற்றிவை. நாளைக்கு இதற்கேற்ற சிகிச்சை செய்கிறேன். ஒரு க்ஷணநேரத்தில் நோய் தணிந்துவிடும்." என்று சொல்லியனுப்பினுர். இதையெல்லாம் செவியேற்ற ஜீவககுமாரன் ஆசிரியரை மும்முறை வலம் வந்துபணிந்து "சுவாமி! நான் ஆயுள்வேதத்தை ஆராய்ச்சிசெய்து அதனுல் இலாபம் பெற்று செல்வவர்தனை வேண்டுகின்றேனில்லை. வேறுபயன் வேண்டுகின்றேனுமில்லை. உலகத்தார்க்கு என்னுலான நன்மை செய்யவேண்டு மென்பதே அடியேனுடைய அவாவின் கருத்து. தேவரீரை அநேகநாளாக வழிபட்டுக் காத்துக்கிடந்தேன். நாளையொரு பொழுதுந் தப்பினுல் அடியேனுடைய கருத்து நிறைவேற எத்தனை நாளாகுமோ. தேவரீர் அப்பிணியாளனுக்கு சிகிச்சை செய்யும்போது அண்டையில் இருக்க அடியேனுக்கு வரங்கொடுக்க வேண்டும்" எனக் கல்லுமுருகக் கனிந்துபேசினுன். ஆசிரியரும் இவனுக்கு இவ்வரங்கொடாவிட்டால் சிஷ்யத் துரோகமாகுமென்று நினைத்து "அப்பா! அப்படியே செய். ஆனுல் பரண்மேல் மறைந்திருக்க வேண்டும்" என்று அநுக்கிரகித்தார்.

ஆத்திரேயரும் மறுநாள் காலையில் வழக்கம்போலே ஜீவககுமாரபக்தனை உடனழைத்துக் கொண்டு சென்று தலைநோயாளனை யடைந்து அவனைச் சாண நீர்க்குழியிலிருக்கச் செய்து ஜீவகன் மறைந்திருக்க ஓரிடமுங்காட்டிச் சிகிச்சை செய்யத்தொடங்கினுர். தொடங்கிக் கபலத்தைக்கழற்றிக் கீழிறக்கி வைத்துவிட்டு மூளையில் யாதேனும் பழுதுண்டோ என்று உற்றுப்பார்த்தார். பார்த்தவிடத்திலே மூளையில் ஒரு புழு மூளையோடு மூளையாய் ஒட்டிக் கொண்டு இருந்தது. உடனே அதனைப்பிடித்

திழுக்கும்பொருட்டுக் கையில் குறடு எடுத்தார். அவ்வளவிலே மறைவிலிருந்த மாணாக்கன் "பொறுங்கள்! பொறுங்கள்!!" என்று கூவினன். ஆசிரியரும் அசைவற்றிருந்து ஜீவகா! இங்கும் இருக்கிறாயா? பொறுக்கவேண்டியதென்ன? இந்தச்சனியனைத் தொலைத்தாலல்லவோ இவன் நோய்தீரும்" என்றார். ஜீவகன் "சுவாமி! மெய்தான். மூளை மிகவும் மிருதுவானதாகையால், புழுவினைப் பிடித்திழுக்கும்போது மூளைக்குச் சேதமுண்டாகி இவன், பாவம்! இறக்கும்படி நேரிட்டாலும் நேரிடும்" என்றான். ஆசிரியர் "அதை மற்றெப்படி ஒழிப்பது?" என்று கேட்க, ஜீவகன் ஐயரே! இக்குறட்டினைச் சற்றுக்கும்பியில் வைத்துக் காய்ச்சி அப்புழுவிற்கு நேராகக் காட்டினால் புழுவும் சூடு பொறுக்கமுடியாமல் வெளிவரும். அப்போது அதனை இவ்வாயுதத்தின் நுனியினால் அசைப்போமாயின் பொட்டெனக் கீழே விழுந்துவிடும்" என்று சொல்லினன். ஆசிரியரும் அங்ஙனே செய்து முன்போலவே மண்டையோட்டினைப் பொருத்தி மற்றும் செய்ய வேண்டுவதைச் செய்த உடனே, நோய் கொண்டவன் பேயாடி விட்டவனைப்போலத் தெளிந்தெழுந்து ஆயுள்வேதியருக்கு ஐந்நூறு பொன்கொடுத்துப்போய்விட்டான். பின் ஆசிரியர் தமது தலைமாணாக்கனைத் தலைமூழ்கி வரச்செய்து கபாலசிகிச்சையின் மர்மத்தை உபதேசித்து "அப்பா நான் இந்தவித்தையின் உதவியால் உயிர்வாழ்ந்திருப்பவன். ஆதலால் நீ இதனை இந்நாட்டில் வழங்கலாகாது!" என்று சொல்லி, ஆசிமொழிகூறி வாழ்த்தினர். ஜீவககுமாரனும் ஆசிரியரை மும்முறை வலங்கொண்டு அடியில் முடியுறப்பணிந்து குருதக்ஷிணையுங் கொடுத்துப் பிரிவாற்றாதவனாய் மனந்தேறி விடைபெற்றுக்கொண்டு புஷ்கரபூபாலனுக்கும் வந்தனம் பண்ணித் தன்வீட்டுமுகமாக வழிகொள்வானாயினன்.

## SHORT STORY: THE GREATNESS OF FAITH.

### நமசிவாய மஹாத்மியம்.

"வஞ்சித்தார் வாழார், வழிப்பறித்தார் பாழாவர்,
பஞ்சான தேஹமிது, பகவானொருவனுண்டு."

பூர்வம் பஞ்சநத க்ஷேத்திரத்திலே ப்ராண தீர்த்தக்கரையிலே ஹரிஹர சிவனென்றொரு அந்தணரிருந்தார். அவர் "அந்தணரென்பர் அறவோர எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலால்" என்ற பெரியோர் வாக்குப்படி, தர்ம்ம சிந்தையுடையவராய் பாபதோஷத்துக் கஞ்சி, பிள்ளை குட்டி ஸம்ஸாரத்தோடு திண்ணைப் பள்ளிக்கூடம் போட்டு ஜீவனம் செய்து வந்தார். காலக்கிரமத்தில் திண்ணைப் பள்ளிக்கூடங்களுக் கெல்லாம் நாசகாலம் வர, அவர் அந்தப் பிரளயத்துக்குத் தப்பிப்பிழைக்க வென்று தஞ்சாவூரிலுள்ள ஒரு மிஷன் பாடசாலையில் சேர்ந்து உபாத்திமைத் தொழிலுக்கு லாயக்காக வாசித்து வந்தார். உபாத்தியாயர் பள்ளிக்கூடத்தில் வாசித்துத் தேறினதும் அவருக்குப்பதினைந்து ரூபாயில் வடக்கே பள்ளிக்கூட உபாத்தியாயர் வேலை யொன்றுகிடைத்தது. அதைக்கொண்டு உபாயஜீவனம் செய்து வரும் நாளில் அவர் ஒருநாள் ஆருத்ராதரிசனத்துக்காகச் சிதம்பரம் போக நேரிட்டது. போகும்வழியில் நதிப்பிரவாகத்தினால் கொள்ளிடம் கரை புரண்டு தண்ணீர் ஓடப், பரிசல்துறையெல்லாம் வெள்ளத்தில் மூழ்கிப்போய் அக்கரைபோக முடியாமல் தவித்தார். அப்பொழுது பிராண பயங்கொண்டு ஹரிஹரசிவன் அங்கேயிருந்த ஒரு பெரிய ஆலவிருக்ஷத்தின் மேலேறி யுட்கார்ந்துக்கொண்டு இரவெல்லாம் தூக்கமின்றி திருவாசகத்தை மனனம் செய்து கொண்டு 'நமச்சிவாய வாழ்க! நாதன் தாள் வாழ்க!' என்று ஸ்தோத்திரம் செய்துகொண்டிருந்தார்

அப்பொழுது தண்ணீர்ப்பெருக்கினால்காட்டி லிருந்த புலியொன்று புகலிட மின்றி அவ்வால மரத்தின் பொந்தில்நுழைந்து வெளிப்புறப் பட்டு மரக்கிளையின் மேலேறிக் கால்நீட்டிப் படுத்துக் கொண்டிருந்தது. அந்தச்சமயத் தில் ஒரு பிள்ளைத்தாய்ச்சி தன் சிறுபாலகனைக் கையிலேந்திக் கொண்டு வெள்ளப் பெருக்கி னால்ஒண்ட விடமின்றி அம்மரத்தையே அண்டி அதன் கீழ்க்கிளையைப் பிடித்துக்கொண்டுதொ ங்கலானாள். இப்படி அந்த விருக்ஷத்தில் அந்த ணர், புலி, தள்ளை (தாய்), தனையன் (பிள்ளை) ஆகிய நால்வரும் ஆபத்துக்கு ஒண்டி வெள் ளத்தில் அடித்துக்கொண்டு போகாமல் தப்பித் தால் போதுமென்று அஞ்சி உயிர்ப்பிச்சை கேட்டு நிற்கையில், ஒரு வேடனொருவன் வில் லும் கையுமாய் அவன் வில்லுக்குத் தப்பியோ டிய மான் ஒன்றைத் துரத்திக்கொண்டு அந்த மரத்தடிக்கே வந்து சேர்ந்தான். அதற்குள் பிரவாகம் அதிகப்பட்டு வேறு எங்கும் கால் வைக்க இடமின்றி யெல்லாம் வெள்ளக்காடா கப் போய்விட்டது.

இந்த அவஸ்தையில் அந்தணன் புலிக்கு அஞ்சி யொடுங்கி யிருந்தான். தாயார் தன் பிள்ளையைக் காப்பாற்றுவதில் கண்ணும் கரு த்துமாக மற்ற அபாயங்கள் எதையும் கவனி யாதவளா யிருந்தாள். புலி மானைக்கண்டு பாய விரும்பியும் வேடனுக்கஞ்சித் தன்னிருப்பிடத் தை விட்டசையாதிருந்தது. மான் முன்னே போனால் புலிவாய்க்கிரையாவது நிச்சயமென் றுணர்ந்து பின்னே திரும்பினால் வேடன்கைப் பட்டிறக்க வேண்டுமென்று அஞ்சி முன்னும் போகாமல் பின்னும்போகாமல் ஒரு சிறுகளை யின் மீது தன்னைத்தாங்கி நின்றது. கிராதகன் அஞ்சாநெஞ்சோடு புலியைக் கொன்று மானை வசப்படுத்தி, அந்தப் புமானை வழிப்பறித்து, அங்கனையைப் பெண்டாள நினைத்தான். அப் பொழுது ஒரு நாகப்பாம்பு அதன் பொந்தில் ஜலம் புகுந்த வேகத்தால் சீறிக்கொண்டு வெளிப்புறப்பட்டு வந்தது. அது வந்த பொ ந்து வாசலில் வேடன் கால் வைத்து நின்றுக் கொண்டிருந்ததால் அவனது குதிகாலை வெடுக் கென்று கடிக்க அவன் சட்டென்று காலைத் தூக்கினான். அத்தருணம் அது சமீபப்பாய்ந்து அவன் மற்றொருகாலைச் சுற்றிக்கொண்டு பீஜத் தைக் கடித்துக்கொண்டு அவன் வீரியத்தைப் பாம்பு தன் முட்டையருந்துவதுபோல் அரு ந்தி நின்றது. அப்பொழுது அவன் "சிவசிவா" என்று சொல்லிக் கொண்டு உயிர்துறந்தான். அவன் உயிர் துறக்கவும் நிலைதவறிக் கீழே வெள்ளத்தில் வீழ்ந்தான். பாம்பும் கூட அவனோடுகீழே வெள்ளத்தில் வீழ்ந்தது. நல் லரவம் தண்ணீரில் தலை மூழ்கப் பொறுக்காத தால், அந்த வெள்ளத்தில் நீரோட்டத்தை எதிர்த்து நீஞ்சி அக்கரைபோய்ச் சேர்ந்தது. அது கடித்துவிட்ட பிணம் மிதந்துகொண்டி ருக்க, அப்பெண்பிள்ளை அதன்மேல் குதித்து தனயனை மர்க்கடம்போல் மாரிலணைத்துக் கொண்டு நீரோட்டத்தின் வேகத்தை யெதிர் த்து நீஞ்சிக்கொண்டு போன பாம்பின்வாலைப் பிடித்துக்கொண்டு அவளும் அக்கரைபோய்ச் சேர்ந்தாள். புலி மானின்மேல் தாவிவிழ இலக் குத்தப்பி வெள்ளத்தில் வீழ்ந்து அதன்வேகத் தைக் கடந்துபோக முடியாமல் கொஞ்சதூரம் சென்று மாண்டது. அந்தணன் ஒருவன் மட் டும் திக்கற்றுத் தியங்கி நின்றான். அப்போது அவன் ஆபத்துக்காலத்தில் பகவானை நினைத்து "நமச்சிவாய வாழ்க!" வென்று அஞ்செழுத்தை யெண்ணித்துதித்தான். அந்த அஞ்செழுத்தே யொரு பஞ்சுமூட்டையாகி வெள்ளத்தில் மித ந்து வர அவன் மெல்ல அதன்மேற் குதித்து ஸ்வாமி விட்டவழி விடட்டுமென்று வெள்ளத் தோடு மிதந்து கொண்டு போனான்.

இப்படி திக்கற்றுத் தியங்கி மயங்கினவ னைப் பஞ்சுமூட்டையின் மேல் அலைதோடு மிதந்துகொண்டு போனவன் கடைசியில் அந் நீரோட்டத்தோடு சமுத்திரம் போய்ச்சேர, அங்கே அலைகளால் மோதப்பட்டு அப்போ

தடித்தவோர் புசல்காற்றி லகப்பட்டுச் சிதறுண்டு பிராணன் போகும்படியான அவஸ்தையிலிருந்தான். அப்பொழுது அவன் ஏறியிருந்த மரக்கிளையின் பேரிலிருந்து விழுந்து அவனோ டாபத்திலிருந்த பிள்ளைத்தாய்ச்சிக்குப் பிணையாக வுதவிய வேடனது பிரேதம் அங்கே மிதக்கக்கண்டு அதை ஆதாரவாகக் கொண்டு பிடித்துக்கொள்ளப் பார்த்தான். ஆனால் அப்பிரேதம் நாட்பட்டு அழுகிப்போயிருந்ததால் இவன் கைபட்டதும் அது தன் துர்நாற்றத்தை வீசி இவனை மூர்ச்சித்துப்போகச் செய்துவிட்டு அது சிதறுண்டு போய்விட்டது. அப்பொழுது பிராண தீர்த்த ஹரிஹரசிவன் பிழைக்கலா மென்கிற ஆசைவிட்டு பூர்வஜன்ம புண்யசவாசனையால் "ஹர ஹர" வென்று சொல்லி ஆவியை விடவிருந்தான். "ஹரஹரனென்ன அரியதொன் றில்லை!யென்றபடி அச்சமயம் அங்கே கட்டுமரம்கட்டி விட்டு, மீன்பிடித்துக் கொண்டிருந்த செம்படவன் வலைவீச அதில் இவன் தேஹம் அகப்பட்டது. உடனே அவன் இன்றைக்குப் பெரிய மீன் அகப்பட்ட தென்று உள்ளங்களித்து வலையை யிழுக்க, அவன் மனமுடைய, ஆச்சர்யம்! ஒரு மனிதனுடைய தேஹம் வலையில் சிக்கியிருக்கக்கண்டான். குத்துயிராயிருந்த அத்தேஹத்தை யிழுத்துக் கட்டை மரத்தின்மேல் போட்டு அதற்கு வேண்டிய உபசாரம்செய்து உயிர்தரிக்கச்செய்து கொண்டிருக்குங் காலத்தில் ஒரு கொள்ளைக்கப்பல் தூரத்தில் வரக் கண்டான். அதைக்கண்டதும் இவன் அந்தப் பிராமணனைக் குத்துயிராய்த்தானே நீரில் தள்ளித் தான் தப்பியோடப் பார்த்தான். கப்பற் கொள்ளைக்காரர்கள் ஏதோ திரவியத்தைச் சமுத்திரத்தில் தள்ளிவிட்டு ஒளித்தோடுகிறானென்று சமுசயித்து அந்தப் பிராமணனையும் அவனையும் பிடித்து கப்பலில் போட்டுக்கொண்டு தூரதேசம் போய், அங்கே யிருவரையும் அடிமைகளாக விற்று அகப்பட்டதை யெடுத்துக்கொண்டு போய்விட்டார்கள்.

ஹரிஹரசிவன் இப்படி அடிமையாகவே அவன் ஆயுசுகாலத்தைக் கழிக்கவேண்டி யிருந்தது. மீன் வலையனோ எஜமானுக்கு மீன்பிடித்துக்கொண்டு வந்து கொடுப்பது வழக்கமாயிருக்கையில், ஒருநாள் ஒரு மீன் வயிற்றில் ஒரு பெரிய தங்கப்பாள மிருக்கக்கண்டு அதைத் தன் சுதந்திரத்தைப் பெறக் கப்பமாகக்கட்டி அடிமை நீங்கித் தன் சுயேச்சைப்படி உலகில் ஜீவனம் தேடிப்பிழைக்க வேறு தேசங்களுக்குக் சென்றான்.

ஹரிஹரசிவன் தூய ஹிருதயத்தோடு அஞ்செழுத்தோதி யிருந்தால் அவன் நற்கதியடைந்திருப்பான். மாசுபட்ட ஹிருதயத்தனாயினும் ஆபத்துக்காலத்தில் அஞ்செழுத்தை நினைத்து "நமச்சிவாயவாழ்க! நாதன்தாள் வாழ்க!" என்று சொன்னதினால் அவன் துர்மரணமாகச் சாகாமல், "மனம்போலிருக்கும் மாங்கல்யம்" என்கிற பழமொழிப்படி எப்பொழுதும் காசின்பேரிலே கண்ணா யிருந்துழைத்து வந்த விசேஷத்தால் அந்தக் காசுக்குத் தானே அடிமையாகி, அவன் கர்மத்தைஅனுபவிக்கும்படி உயிர்தப்பிப் பிழைத்தான்.

அந்த ஜன்மத்தில் அடிமையாகவே யிருந்துயிர் துறந்தாலும் அவன் மறுஜன்மத்தில் தன் ஜாதிமாறாமல் அந்தணகுலத்தி லவதரித்தும் வாய்மை தூய்மையின்றி வைசியலக்ஷியம் மேலிட்டு பணத்துக்குழைத்து பணத்தையிழக்க கர்மவிதி யேற்பட்டவனாய் முன் பஞ்சு மூட்டையாக வந்த அஞ்செழுத்துத் தானே இந்த ஜன்மத்தில் வைசியலக்ஷணம் பொருந்திய மானிடவுருவாக அமைதியுற்று அந்தப் பிராமணனை அடிமைகொண்டு அட்டைபோலொட்டி அவன் யசனஸ யுண்டுவருகிறது.

கர்மம் யாரையும் விடாதாயினும் நிஷ்காம்மிய கர்மத்தால் அதை வெல்லல் ஆகும் என்பதை இதை வாசிப்போர் அறியவேண்டும்.

வேடனுக்கஞ்சியோடிய மான் அவ்வாலவிருக்ஷத்தில் தானேயிருந்து வெள்ளம்வடியவும் தப்பிப்பிழைத்தது.

## A FIRST LESSON IN CHILD-STUDY.
## TIT-BITS FOR CHILDREN.

### பாலவித்யாம்சம்.

### சிறுவர்க்கான துக்கடாக் கதைகள்.

குழந்தைகளே, நான் உங்களுக்கு சின்னச் சின்ன துக்கடாக்கதைகள் சொல்லப்போகிறேன். அவற்றை மட்டும் நீங்கள் பக்தி சிரத்தையோடு கவனமாய்க் கேட்பீர்களானால், பெத்தப் பெரியவர்களுக்குத்தெரியும் அற்புத சமாசாரங்களெல்லாம் உங்களுக்குத் தெரிய வரும்.

"அம்மா 'குட்டி' யுன்நாமம்!
அருமை யாமொரு வாலை ரூபம்!
சும்மா விருந்துன் சொரூபத்தைக் காண்பான்
சுசியோ டுழைத்தேன் வெகுகாலம்."

'அப்பா, உனக்கு 'நான் குழந்தை' வேணுமோ வேண்டாமோ?"

ஐந்துவயதாகாத சிறு குழந்தையொன்று தன் தாயாரிடம் சென்று விளையாடிற்று. சாப்பிடுகிறநேரம் வரவே, விளையாட்டை ஸரஸமாய் நிறுத்தியோ அல்லது விளையாட்டோடு விளையாட்டாகவோ அக்குழந்தையைச் சாப்பிட அழைக்காமல், அதற்கு மனம் விளையாட்டின் மேலிருக்கையில் தன் அதிகாரத்தைக்காட்டி சாப்பிட அழைத்தாள். குழந்தை தாயார் அதிகாரத்துக்கு உட்படவில்லை.

"சாப்பிடவருகிறையா, அப்பாவிடம் சொல்லட்டுமா?" என்றாள் தாயார்.

'அப்பாகிட்டத்தானே போய் சொல்லிக்கோ!' என்றது குழந்தை.

உண்கலத்தில் சாதத்தைவைத்து "சாப்பிடு! இல்லாவிட்டால் உதைப்பேன்!" என்றாள் தாயார்.

"ஊட்டணும்! இல்லாவிட்டால் நான் சாப்பிடமாட்டேன்!" என்றது குழந்தை.

"உனக்கு சாப்பிடக் கையெங்கே போச்சு! சின்னக்குழந்தை அழுகிறது; நான் ஊட்ட முடியாது!" என்றாள் தாயார்.

"அப்படி ன்னா நான் அப்பாகிட்டப்போய்ச் சொல்லுவேன்!" என்றது குழந்தை.

"போய்ச் சொல்லு போ!" என்று தாயார் கடுகடுத்துச் சொல்ல, குழந்தை அழுதுக்கொண்டு மேலேபோய், "அப்பா, அம்மா சாதம் ஊட்டமாட்டேன் என்கிறாள்!" என்று சொல்லியது.

"நீ அழாதே போ! நான் அம்மாவை சாதம் ஊட்டச் சொல்கிறேன்!" என்று சமாதானம் சொல்லியனுப்பக் கீழேவந்து தாயாரைச் "சாதம் ஊட்டு!" என்று கேட்டது.

"குழந்தை அழுகிறதடி! நீயா சாப்பிடேன்; உனக்கென்ன கேடு!" என்று தாயார்கோபித்துச் சொல்ல,

"உனக்குத்தான் கேடு! நான் மட்டும் குழந்தையில்லையோ!" என்றது.

"குழந்தையுமாச்சு, கோட்டானுமாச்சு! எத்தனை குழந்தைகளுக்கு நான் ஏக காலத்தில் ஈடு கொடுப்பேன்" என்று தாயார் வெறுத்துச் சொல்ல, "நான் குழந்தை, உனக்கு வேண்டாமா?" என்று வெடுக்கென்று தாயாரைக்கேட்டது.

"நீ விஷமம் செய்து படுத்துகிறாய்! ஆதலால் நீ யெனக்கு வேண்டாம் போ!" என்றுதாயார் பதில் சொல்ல, குழந்தை மனம் குன்றித் தகப்பனாரிடம்போய்,

"அப்பா, அம்மாக்கு 'நான் குழந்தை' வேண்டாமென்கிறாள். உனக்கு 'நான் குழந்தை' வேணுமோ? வேண்டாமோ?" என்று கன்றின முகத்தோடு வெகு ரோஸப்பட்டுக் கேட்டது.

தகப்பனார் குழந்தை முகத்தைப்பார்த்துத் திடுக்கிட்டு, நடந்த விர்த்தாந்தத்தைவிசாரிக்க, "அம்மா 'நான் குழந்தை' வேண்டாமென்னாட்டாள். உனக்கு 'நான் குழந்தை' வேணுமோ, வேண்டாமோ?" என்று மறுபடியும் மனத்தாங்கலுடன் குழந்தை கேட்க,

"எனக்கு வேணுமடா அப்பா! உன்னைக் குழந்தைவேண்டாம், என்று சொன்னதுயார்? அம்மாள் சுத்த அசடு. சமர்த்தாயிருந்தால் அப்படிச் சொல்லியிருக்க மாட்டாள்!" என்று சமாதானம் சொல்லக் குழந்தை அகமும் முகமும்மலர்ந்து ஆறுதலடைந்தது.

அந்தக்குழந்தையை "வேண்டாம்" என்று தாயார் சொல்ல அதற்கு எவ்வளவு மனத்தாங்கலும் ரோஸமும் உண்டாயிற்றுப் பார்த்தீர்களா !

தாமரைப்புஷ்பம் சூரியனைக்கண்டு மலர்வதும் இருளைக் கண்டு குவிவதும் எதனல்? அப்படியே குழந்தை முகம் அன்பில் விரிந்து ஆத்திரத்தில் குவியும்.

"குழந்தையும் தெய்வமும் கொண்டாடுமிடத்திலே" யென்று பெரியோர் சொல்லும் பழமொழிக்கு அர்த்தம் அந்தக் குழந்தை முகத்தைப் பார்த்து அதன் சோகக் குரல் காதில் விழுந்தபின் தான் எனக்கு நன்ருகத் தெரிந்தது. "குழந்தையைப் புறங்கையால் தள்ளக்கூடாது" என்று எல்லாருக்கும் தெரியும். "புறங்கையால் தள்ளக்கூடாது" என்பது மட்டுமல்ல: "மனதால் புறக்கணித்துப் பேசுவதும் கூடாது" என்பதை இச்சிறு குழந்தை யெனக்குப் போதித்தது. இப்படியாக 50-வயதான பெரியவர்களும் 5-வயதாகாத குழந்தை நடத்தையிலிருந்து எத்தனையோ நீதிபோதனைகளைக் கண்டுணரலாம். ஆதலால்தான் ஔவையார் ஓதுவதொழியேல்" என்று சொன்னுள்.

"உயிருள்ளமட்டும் பயமில்லை!" ஏனெனில் எத்தனை மந்தமதியாக விருந்தாலும் ஒன்று தப்பினுல் ஒன்றினுல் உண்மையை ஓர்ந்துணரலாம். பிறப்புமுதல் இறப்புவரையில் ஜீவன் கற்றுக் கொண்டேயிருப்பதால் "ஓதுவதொழியேல்" என்று சொன்னுர் ஞானத்தாயாகிய ஔவையார்.

பாலபோத சிக்ஷா ஞான சாதனமான இந்த விவேகசிந்தாமணியும் குழந்தைகளாகிய ஒவ்வொருவரையும் பார்த்து "நான் விவேகக் குழந்தை, உங்களுக்கு வேணுமோ, வேண்டாமா?" என்று உருக்கமாகச் 'சுருக்'கென்று இதயத்திற் பாயக் கேட்கிறது.

"வேண்டாமென்று புறக்கணித்தால், அதிக ரோஸத்தோடு மனத்தாங்கல் கொண்டு வித்யேசுவரியிடம் சென்றுக் கல்லும் கரைந்துருக முறையிடுகிறது,

இந்த முறையீட்டுக்கு இடங்கொடுக்காமல் நடந்து கொள்கிறவர்களுக்கே வித்யாலக்ஷ்மி தனது இனிய பிரஸாதத்தை யளித்து மனங்களிப்பாள். விவேகசிந்தாமணியாம் அவள் குழந்தையைப் புறக்கணித்தாரை அவளும் புறக்கணித்து முகங்கோணி நிற்பாள். ஆகையால் குழந்தைகளே, நீங்கள் அவள் முகங்கோண நடந்து கொள்ளாதீர்கள்! இப்படிக்கு,

உங்கள் அன்புள்ள,
குட்டியண்ணு.

---

## SHORT TALES FOR YOUNG FOLKS.

### சிறுவர்களுக்கான சிறுகதைகள்.

### "பஞ்சிலும் லேசானபண்டம்."

குழந்தைகளே, உங்களுக்குத் தெரிஞ்ச பண்டங்களிலெல்லாம் பஞ்சு தான் மிகலேசானது.

"பஞ்சான தேஹமிது
பகவானொருவனுண்டு."

என்று விவேகத்தாய் தாலாட்டிச் சீராட்டியிருக்கிருள். ஆனுல் பஞ்சிலும் 6-மடங்கு லேசான பண்டமொன்றிருக்கிறது. ஜாவாதேசத்தில் ஏராளமாகப் பயிராகும் 'காபோக்' விருக்ஷமொன்றிருக்கிறது. அந்தமரத்தின் காய்முற்றி நெற்ருனல் அதற்குள் இலவம் பஞ்சுபோல் பட்டவ்வளவு ஸந்நமான நாரொத்த பண்டமிருக்கிறது. அதை நூலாகநூற்று நெசவு செய்யவென்று சென்ற இருபதுவருஷங்களாக ஒரு யந்திரம் நிர்மித்துவர முயற்சிசெய்து வந்தார்கள். கடைசியில் அந்த யந்திரம் நிர்மாணம் செய்து முடிந்து அந்த 'காபோக்' நாரினுல் நூற்ற நூல் கொண்டு தலையணைத் துணி

முதலிய சரக்கு செய்யத் தலைப்பட்டிருக்கிறார்கள். அது பருத்தியைவிட 6-மடங்கு லேசானது.

* * *

"குடமுடைந்தாற் குடமாகும்,
மனமுடைந்தால் மனமாகும்?"

இது ஒரு சாதாரணமான பழமொழி, நான் குழந்தையாயிருக்கும்பொழுது என் தாயார் இதைப் பன்முறை சொல்லி என்னைத் தேற்றினது இன்னும் என் ஞாபகத்திலிருக்கிறது. இதன் உள்ளர்த்தம் என்னவென்றால், ஸ்தூலமான நாமரூப பேதங்களையுடைய பண்டங்களுக்குக் கெடுதி ஸம்பவித்தால் அதை நிவிர்த்தி செய்து கொள்ளலாம். மிஞ்சிப்போய் உடைந்து விட்டால் செப்பனிட்டுக் கொள்ளலாம். ஆனால் சூக்ஷ்மரூபமான மனது கவலைப்பட்டு நிலைகுலைந்து போனால் அதை நேர்ப்படுத்துவது மனுஷ ஸாத்தியமானதல்ல. இதையே இன்னொரு விதமாகவும் மாற்றிச் சொல்வதுண்டு! "தேஹவியாதிக்கு மருந்துண்டு: மனோவியாதிக்கு மருந்தில்லை" யென்பர்.

குழந்தைகளை வளர்ப்பதில் அவர்கள் மனமுடையாமல் பாதுகாப்பது தான் மிகவும் கஷ்டமான வேலை. ஏழைக்கும் அரசர்க்கும் இதில் வித்தியாஸமில்லை.

உதாஹரணமாக இப்பொழுது நேர்ந்த ஒரு அரசிளங்குமரன் பரிதாபக்கதையைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

'ப்ரின்ஸ் காரலாப் பரிதாபக்கதை.'

ருஷியாவுக்குத் தலைநகரமாகிய 'மாஸ்கோ' பட்டணத்தில் ஒரு அரசிளங்குமரன் மனமுடைந்து தன் தேஹத்தை விட்டு விட்டான். அவன் பேர்'ப்ரின்ஸ் காரலாப்'. அவன் அரசவம்சத்திற் பிறந்தானாயினும், ஏழையாகவேயிருந்தான். வயது 20-ஆயிற்று. பள்ளியிற்பழகும் காலத்தில் தனக்கு நன்றாகப்பாட வருகிறதென்றும் குரல் இனிமையாக விருக்கிறதென்றும் நினைத்து பள்ளிப்படிப்பை அசட்டை செய்து விட்டான். 20-வது வயதில்'மாஸ்கோ' பட்டணம் சென்று அங்கே பாடக்கற்றுக் கொள்ள முயன்றான். கையில் காசில்லை. உறவு முறையான் ஒருவன் கையைப் பார்த்துக் கொண்டிருந்தான். 'மாஸ்கோ' பட்டணம் வந்து சேரவும் அங்கே சாதாரணப்படிப்பு நன்றாகக் கற்றிருந்தால்தான் பாடக் கற்றுக் கொள்ளலா மென்று கண்டுகொண்டான்.

"இளமையிற்கல்" என்கிற மூதுரையைச் சட்டை செய்யாமல் தன் இளமை வீணிற் கழிந்ததைப்பற்றி விசனித்து மனமுடைந்தவனானான். என்னசெய்வதென்று தெரியவில்லை. மனமுடைந்த வேதனையில் வாழ்நாளை வெறுத்து துப்பாக்கியால் சுட்டுக்கொண்டு பிராணனை விட்டுவிட்டான். அரசனானாலும் ஏழையானாலும் மனவேதனை எல்லாருக்கும் ஒன்றுதான். இதை நித்தியப்படி, அனுபவத்தில் காணலாம்.

* * *

இங்கே குழந்தையொருவனுக்கு அபயங் கொடுத்து ஆதரிப்பதாகச் சபதம் செய்த ஒருவர் திடீரென்று தன் வாக்கை மறந்து அதனால் மனம் சோழைப்பட்டு வழவழவென்று உழன்றதைப் பார்த்து அக்குழந்தை மனம் திகிற்படலாயிற்று. அப்பொழுது விவேகத் தாய் ஸ்ரீலோகநாயகி யுருக்கொண்டு அபயவரத ஹஸ்தங்கள் விளங்கத் தோன்றி "அப்பா, நீ யொன்றுக்கும் அஞ்சாதே, நானிருக்கிறேன்"! என்று அபயம் கொடுத்து ஆறுதல் கூறித் தேற்றப் பையன் தேறலுற்றான். ஆகையால் குழந்தைகளே "இந்த தேஹம் நான்" என்று மதம் பொங்கி யெழும்அஹம்பாவத்தில் அகப்பட்டுக் கொண்டு துரியோதனாதியர்களைப் போல் அழிந்துபோகாமல்,

"பஞ்சான தேஹமிது
பகவானொருவனுண்டு"

என்பதை உள்ளத்திருத்தி நெஞ்சகத்தில் வஞ்சகநினைப்பதை அறவிட்டு, தர்மபுத்திர

ரைப்போல் தர்மமே ஜயமென்கிற விருதுகட்டிப் பரோபகார சிந்தையோடு ஸத்தியவிரதம் கெடாமல் உழைத்து வாருங்கள்.

"ஸத்தியமே நன்மார்க்கம்
தவறு வரும் மற்றெதிலும்
வித்தையில் லாபமெத்த
விசுவாசம் மெத்த மெத்த."

என்னும் விவேகத்தாய் சொல்லிய வாக்கியத்தின் உண்மையை உங்கள் சொந்த அனுபவத்தில் தானே கண்டுணருவீர்கள். "கெட்டிக்காரன் புளுகு எட்டுநாளில் வெளியாகி விடும்" என்பது நிச்சயம்.

---

## THE MAIDEN TRIBUTE OF MODERN SOCIETY.

### தற்காலத்துத் தாடகைவாங்கும் கன்யாபலி.

சுசிலாதேவி பிராணத்தியாகம் செய்தது பணஆசை கொண்ட எல்லாருக்கும் ஏளனமாகிவிட்டது, அந்தப் பெண் தற்காலத்துத் தாடகை வாங்கும் கன்னியாபலிக்கிசைந்து,

"நன்று தேஹம் விடுதலேன்றே
நானுமூட்டு மிச்சிறுதீ
என்றும்விடா திவ்வுலகில்
காட்டுத்தீயா வளர்ந்தெரிய
வரமெனக்கு நீயருள்வாய்!"

என்று சொல்லி உயிர்துறந்தது பணமே பெரியதென்று பணப் பேய் பிடித்தார்க்கு ஒரு ஏச்சுப் பேச்சுக்கிடமாயிற்றே யன்றி வேறு பலனைக் காணக்கூடவில்லை யென்று பெங்காலி பத்திரிகை கூறுகின்றது. பவானிப்பூரில் இன்னொரு பெண்மணி தன் கலியாணத்துக்கு வழி பிறக்கும் பிறக்குமென்று கடைசி நாள்மட்டும் காத்திருந்து கடைசியில் 5000-த்துக்குக் குறைந்து மாப்பிள்ளை கிடைக்காதென்பதை யுணர்ந்து தன்னால் தன் பெற்றோர்க்கு இன்னல் விளைக்கவேண்டாமென்று உயிர்துறக்கலானாள். இவர்களை யெல்லாம்மனோதிட மில்லாதவர்கள் என்று சொல்லி யிகழ்வது பணத்தில்கண்ணுள்ளவர்களுக்கு எளிது. ஆனால் அவர்களுடைய மனோநிலையை யறிந்து அனுதாபத்தோடு அவர்கள் நடத்தையை ஆராய்வதற்குப், பணமே பெரிதென்று நினைப்பவர்கள் அருகராக மாட்டார்கள். ஆகையால் "உலகம் பலவிதம்" என்கிறபடி அவர்கள் மனம்போல் அவர்களைப் போகவிட்டு உலக தர்மத்தை யொட்டி உண்மைவிசாரம்செய்து விவாஹ ஸம்ஸ்காரத்துக்கும் வரசொல்கத்துக்கும் நியாயமான சம்பந்த முண்டா வென்று தீர விசாரித்து, "தர்மமே ஜயம்" என்கிற பிருதுகட்டி ஊண்மைக் கொப்பாயிருந் துழைக்க வேண்டும். பணமிதப்பில் பணமே பெரிதென்றும் பணம்பற்றப் பாபதோஷம் பார்க்கவில்லையென்றும் நினைக்கிறவர்கள் வங்காளத்தில் மட்டும்தான் இருக்கிறார்களென்றில்லை. தென்னிந்தியாவிலும் இவ்வினத்தார் யதேஷ்டமாயிருக்கிறார்கள். ஆனால் அவர்களைப்பற்றியொன்றும சொல்லக்கூடாது; சொன்னால் வீண் பொல்லாப்பு வரும். "உள்ளதைச் சொன்னால் நொள்ளக் கண்ணிக்கு நோப்பாளமாகத் தானிருக்கும்."

---

## CONVERSATION.

"The art of conversation is the most important social gift, but there is no royal road for acquiring it."

"A well educated gentleman may not know many languages—may not be able to speak any but his own—May have read very few books. But whatever language he knows, he knows precisely; whatever word he pronounces, he pronounces rightly; above all he is learned in the peerage of words, knows the words of true descent and ancient blood at a glance from words of modern *Canaille*"—*Ruskin.*

"You should eudeavoure to cultivate the habit of attention so that you may build upon the remarks of your companion."

## ஸம்பாஷணு சக்தி.

ஸம்பாஷணை யென்பது இருவர் மனமொத்துப் பேசல் என்று சொல்லலாம். பலர் மனமொத்துப் பேசல் சம்பாஷணைக் கூட்டம் அல்லது கச்சேரி யென்று சொல்லப்படும்.

மனம் ஒத்து வருவது கஷ்டமான வேலை. ஏனெனில் மனம் ஒன்றுவிட்டு ஒன்றைப் பற்றிக்கொண்டே யிருக்கும். இப்படி குரங்கு ஜேஷ்டை செய்வது அதற்கு சுபாவம். அந்த மனதைக் கவர்ந்து நாம் சொல்லும் வார்த்தையையும் விஷயத்தையும் கவனிக்கும்படிச் செய்வது இலகுவான காரியமில்லை. ஆனாலும் ஸம்பாஷணு சக்தி யிருந்தால் ஜன சமூகத்தில் சேர்ந்து உறவாடிப் பழக்கலாம். "தன்னை யறிந்தவன் தலைவனுவான்." தன்மனதை யறிந்தவன் மஹான் (பெரியவன்) என்று சொல்லப்படுவன். ஏனெனில் பாவனம் இன்றி வாசிகம் பலிக்காது. மனதில் நினைவு பூரணமாயிருந்தால் தான் வாக்கில் வார்த்தை தானுக வரும். இல்லாவிட்டால் வாக்குத் தடைப்பட்டுபேசவாராது அறிவுள்ளவன் மனதை யடக்கியாளக் கற்றவனுவான். தன்மனதை யடக்கியாளக் கற்ருல் எல்லார் மனதையும் அடக்கியாளலாம். ஏனெனில் மனம் குரங்கு சேஷ்டை செய்தாலும் அது தன்னை யறிந்தார்க்குப் படிந்து நடக்கும். தன்னை யறியாதாரைத்தான் மயக்குவிக்கும்.

ஸம்பாஷணைக்கு இன்றியமையாத லக்ஷணங்களில் பூரணமான மனது ஒன்று. மற்றென்று அதற்கேற்றபடி பூரணமான வாக்குத் திறமை, மனேசக்தி யுள்ளவர்களுக்கு வாக்கு ஸித்தி தானே வரும். ஏனெனில் "Language is the slave of thought" என்றபடி, மனம் சங்கல்பிப்பதற்கு ஏற்றபடி வாக்கு அதன் எண்ணத்தை வெளியிடும்.

நீர்நிலைக்குத் தக்கபடி நீராம்பல் கொடி விட்டு வளர்ந்து நீருக்குமேல் வந்து புஷ்பிக்கிறது போல், மனநிறைவுக்குத் தக்கபடி மனதிலிருந்துண்டான வாக்கு அதன் கருத்துகளைப் பூரணமாகத்தெரிவிக்கும் சக்திவாய்ந்ததாகும்.

தன்குலை தாங்காக் கரம்பில்லை. அதுபோல் நன்மனம் சிந்தித்ததை வெளியிடமுடியாத வாக்கில்லை. இரவல் சரக்கு வாங்கி வேஷம் போடுகிறவர்கள் தானே வாக்கு சக்தியால் கைவிடப்பட்டு அவமான மடைவார்கள்.

ஆகையால் பாஷாஞானமும் ஸம்பாஷணைக்கு ஓர் இன்றியமையாத சாதனமாகும்.

மனப்பழக்கமின்றி (கல்வியின்றி) நாப்பழக்கம் (ஸம்பாஷணுசக்தி) யுண்டாக மாட்டாது. பாஷாஞானமின்றி மனப்பழக்கமாகிய உண்மைக்கல்வி ஸித்திக்காது. ஆகையால் சிறுவயதிலேயே தாய் பாஷையை அசட்டை செய்து விட்டு அந்நிய பாஷையைக் கற்கமுயல்கிறவர்கள் அரசனை நம்பிப் புருஷனைக் கைவிட்ட பெண்ணின் கதியடைவார்கள்.

நம்மில் இங்கிலீஷ் படித்தவர்களென்று பேர் வைத்துக்கொண்டிருக்கிறவர்கள் வீட்டிலும் ஜனசமூகத்திலும் பேசும்பொழுது பல பாஷைகளை யொன்ருக்கொட்டிக் கலந்து கர்ணகடூரமாய்ப் பேசுகிருர்கள்.

மிருகங்களும் விசுவாசத்தினுல் மனுஷர் பேசும் பாஷையை உணர்ந்து கொள்ளுகின்றன.

இன்று காலையில் நான் வழியில் வரும்பொழுது ஒரு பறைச்சி இரண்டு நாய்களை யழைத்துக்கொண்டு குறுக்கு வழியே வந்தாள். வரும்பொழுது ஒரு சுவரேறிக் குதித்து வரவேண்டியிருந்தது. அவள்பின் வந்த இரண்டு நாய்களில் ஒன்று அவள் குதிப்பதைப் பார்த்து தானும் குதித்து ஓடி வந்துவிட்டது. மற்றென்றுக்கு அவ்வளவு உயரத்திலிருந்து குதிக்க சக்தியில்லை. ஆதலால் அது குதிக்கத் துணியாமல் தவித்துக் கொண்டிருந்தது. அதைப் பார்த்து அந்தப் பறைச்சி "நீ அப்படிப் போய் சுற்றிக்கொண்டு வாசல் வழியாக வா!" என்று வார்த்தையால் சொன்னுள். அது அவசரப்பட்டுக்கொண்டு அவஸ்தைப்பட்டது. ஆனுலும் குதிக்கத் துணிவு வரவில்லை.

அதைக்கண்டு அப்பறைச்சி, "உன்னால் குதிக்க முடியவில்லை; அப்படிபோய்ச் சுற்றிக்கொண்டு தான் வரவேணும்! போ!" என்று சொன்னாள். அது அவளுடைய ஒத்தாசையை வேண்டினதாக பாவனைகாட்டியது. அதை யுணர்ந்து "நான் திரும்பிவர மாட்டேன்: நீதான் அப்படிப்போய் சுற்றிக்கொண்டுவரவேணும்! போ!" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டாள். நான் "நீபேசுகிற பாஷை அதற்கு அர்த்தமாகுமா?" என்று கேட்டேன். "ஓ! சற்றுப்பாருங்கள்; அது அப்படியே போய்வருகிறதா இல்லையா வென்று!" என்றாள். அந்நாயும் அப்படியே போய் சுற்றிக்கொண்டு வாசல் வழியாக ஓடி வந்துவிட்டது. நம்மில் இங்கிலீஷ் படித்தவர்கள் ஸம்பாஷணைத்திறம் இவ்வளவுகூட இல்லையே!.

---

## THE SAYINGS TRUE OF GRANDMA WISE.

## ஔவைப்பாட்டி சொல் அருந்தவ உபதேசம்.

குழந்தைகளே! நான் உங்களைப் போல் சிறு குழந்தையாக விருந்த பொழுது எனக்குப் பாட்டியார் சொன்ன கதைகள் எத்தனையோ உண்டு. சரியாக சாப்பிடா விட்டால் அதற்கு ஒரு கதை சொல்லுவள். அக்கதையைக் கேட்டுக் கொண்டே, "ஊம், ஊம்," என்று சொல்லும் பொழுது "ஆம், ஆம்," என்று ஒரு பிடி சாதம் கையில் போட்டு "வாயில் போட்டுக்கோ பார்ப்பம்!" என்பள். கதை கேட்பதிலுள்ள உற்சாகத்தில் என்னத்திற்காகப் பிணங்கினேன் என்பதை மறந்து விடுவேன். இப்படியே சமயோசிதமாய் ஒவ்வொன்றுக்கும் ஒரு கதையைச் சொல்லி அவர்கள் காரியத்தைச் சாதித்துக் கொண்டு போக, நான் விஷமம் செய்யும் போதெல்லாம் பாட்டி ஒரு நல்ல கதை சொல்லுகிறாளென்று அவளிடத்தில் அதிக விசுவாசம் பாராட்டி யிருப்பேன். அந்தப் பாட்டியை உனக்கு இந்தக்கதை யார் சொன்னார்கள்? என்று கேட்டால் "நான் உன்னைப் போல் குழந்தையா யிருக்கும் பொழுது எங்கள் பாட்டியார் சொன்னாள்" என்பள்.

"உங்கள் பாட்டிக்கு யார் சொன்னார்?" என்று கேட்டால்,

"அவாள் பாட்டி சொல்லி யிருப்பள்!" என்பாள்.

"அந்தப் பாட்டிக்கு யார் சொன்னார்?" என்று பின்னுங் கேட்டால்,

"அவாள் பாட்டி சொல்லி யிருப்பள்!" என்று அதையே சொல்லுவள்.

இப்படிக்குப் பாட்டி சொன்ன கதைகளெல்லாம் முதிர்ந்த அறிவினால் சொன்ன கதையாதலால், அதை யெல்லாம் திரட்டி யுருட்டி மாத்திரை செய்வதுபோல், ஒரு பாட்டி சுருக்கமாய் அவைகளை யெல்லாம் ஒரு வாக்கியம் இரண்டு வாக்கியத்தில் அடக்கி அதையும் காதுக்கினிமையாக விருக்கப் பாட்டாக அமைத்து விட்டாள். அந்தப்பாட்டுகளுக்கு "மூதுரை" யென்று பேர். "அந்தப் பாட்டிக்கு யார் சொன்னார்?" என்று நீங்கள் என்னைக் கேட்பீர்கள். அதை நான் உங்களுக்குச் சொல்லும் படியாக அந்தப் பாட்டி மிச்சம் விட்டு வைக்க வில்லை!

அவள் தானே தான் சொல்லும் ஒவ்வொரு உண்மையையும் தனக்குச் சொன்னது யாரென்று சொல்லி அந்தப் பேர்வழியை உங்களுக்கும் காட்டி விட்டிருக்கிறாள். ஆகையால் நீங்கள் அவள் சொல்வது நிஜமோ பொய்யோ வென்று நேரில் தானே பரீக்ஷித்தறிந்து கொள்ளலாம். அந்த ஔவைப் பாட்டி குழந்தை முதல் கிழவியாகப் போகிற வரையில் தவஞ் செய்து இந்த உண்மைகளை யெல்லாம் உள்ளபடி ஆராய்ந்து சாக்ஷாத்கார தரிசனத்தா லறிந்தாள். அவள் தவஞ் செய்து கொண்டே யிருந்ததால், கலியாணம் செய்து கொள்ள ஒழிய வில்லை. கிழவியான பிறகு பிள்ளைப் பெறுவது கஷ்டமென்று உலகிலுள்ள எல்லாரையும் அவள் தன் குழந்தைகளாகப் பாவித்து அருந்தவ உப தேசம் செய்து வந்தாள். அப்படிப் பட்ட அற்புதப் பாட்டியாருடைய அருந்தவ உபதேசமொழிகளில் சிலவற்றை யெடுத்து நான் உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். ஏனென்றால் நான் "தாத்தா" வாகப் போய் விட்டேன்

குழந்தைகள் 'என்னைச் சூழ்ந்து கொண்டு "தா, தா, தாத்தா," என்று மழலை பேசும். போது நான் கோட்டானைப்போல் வாயை மூடிக்கொண்டிருக்க முடிய வில்லை. நான் பர்வதராஜனைப்போல் மௌன விருதம் பூண்டு மௌனப் பிரஸங்கம்செய்து கொண்டிருந்த கால முண்டு. ஆனால் "அது கூடாது, கீழே யிறங்கி வந்து, குழந்தைகளோடு குழந்தையாய் விளையாடி, அவர்கள் எண்ண மெல்லாம் தன்னதாக அவர்க ளோடிருந் தெண்ணி, அவர்களோடு ஆடிப் பாடி விளையாடி, அவர்கள் கஷ்டங்களை யெல்லாம் தன்னதாகப் பட்டனுபவித்து, அவர்களுக்குச் சரியாக விளையாடிக்கொண்டு அவர்களுக்கு வித்யா வழியும் காட்டி. பழைத்துக் கொண்டு போக வேண்டு" மென்றும், "குழந்தைகளுக்காகக் கீழே யிறங்கி மேலே போகவேண்டும்," என்றும் சொல்லி என் சமாதியைக் கலைத்து என்னைப் பிரமாணிக்கம் செய்யச் சொல்லி வாங்கிக் கொண்டு உங்களுக்கும் எனக்கும் இடையே பிரதிபந்தம் ஏற்பட்டதை யெல்லாம் அறுத்து நாம் கூடிக்குலாவி யுறவாட வழியேற்படுத்துவதாக வாக்கும் கொடுத்து விட்டார் உங்கள் வித்யாதிகாரிகள். "என்னுடைய பள்ளிப்பிள்ளைகள்" என்று உங்களிடம் பாத்தியம் கொண்டாடுமவர் பெற்றவர்களுக்குப்பிள்ளையுதவும்படி மட்டும் செய்தால் பரம சாதகமாயிருக்கும்.

## "ALL IS FOR THE BEST"

### "எல்லாம் நன்மைக்கே"

குழந்தைகளே, உங்களுக்குழைக்க என்னை யழைத்தபோது உங்களில் ஒரு குழந்தை என்னிடம் வந்து, "தாத்தா! 'எல்லாம்நல்லது! எதுவும் கடைசியில் நல்லதாகவே முடியும்!" என்கிறார்களே' அதையே விருதமாகக் கொண்டு எங்களுக்கு வழிகாட்டி யுழைக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டான். "அப்பா! எல்லாம் சிவமயம்" என்கிறார்களே, இதைத்தான் அப்படிச் சொல்கிறார்கள் என்றேன். சிவம் என்றால் மங்களம் என்று அர்த்தம். இதைப் பெரிய பெரிய மஹான்களெல்லாம் சித்தாந்தப்படுத்திக் காட்டியிருக்கிறார்கள் என்றேன். அப்படியா! என்றான் குழந்தை.

"நன்மைசெய்தால் நன்மையே விளையும்."

ஔவைப்பாட்டியார், "நன்மை செய்தால் நன்மையே விளையும்" என்பதை வெகு நன்றாக வெடுத்துச் சொல்லியிருக்கிறார். "உலகத்தில் நாம் ஒருவர்க்கு நன்மை செய்தால் அவர் நமக்குத் தீமை செய்வதை நாம் தினம் பார்க்கிறோமே, அது எப்படி?" யென்று கேட்பீர்கள். நீங்கள் சொல்வது சரியல்ல! "எள்ளுவிதைத்தால் கொள்ளுமுளைக்குமா?" முளையாது போல் நன்மை செய்தால் அதற்குபதில் செய்வது மேலுக்குத்தீமையாகத் தோன்றினும் அது முடிவில் நன்மையே பயக்கும். பூமியை நம்பி விதையிட்டால் அது முளைக்குமோ என்று சந்தேகப்பட வேண்டாம்.

பூசாரம் மட்டும் நல்லதாக விருக்கப்பார்க்க வேண்டும்.

அதேமாதிரி "நன்றியொருவர்குக்ச் செய்தக்கால்," அந்த நல்லுபகாரத்துக்குப் பிரதியுபகாரம் எப்போ செய்வார்களென்று ஏங்கியிருக்கவேண்டாம் என்கிறார் ஔவையார். ஏனெனில் நன்மை வீண்போகாது! இந்த உண்மையை அந்தப் பாட்டிக்கு யார் சொன்னது? என்று கேட்பீர்களேல், "உங்கள் தோட்டத்திலிருக்கும் தென்னமரத்தைக் கேளுங்கள்" என்று சாட்சி கூறியிருக்கிறாள். அதற்கு நீரூற்றிவளர்த்தால், அது வேரினால் உண்ட நீரைத் தலையாலே இளநீராகத்தந்து உதவுகிற உதாரணத்தைக் கொண்டு உண்மையுணர்ந்து கொள்ளுங்கள் என்று சொல்கிறாள், இதைச் சொல்ல எனக்கு இத்தனை வார்த்தைகள் உபயோகிக்கவேண்டியிருந்ததே! அவள் எவ்வளவு அழகாயும் சுருக்கமாயும்இதைச்சொல்லியிருக்கிறார் தெரியுமா? அதை அப்படியே சொல்லுகிறேன். நீங்கள் கேட்டு மனதில் வைத்துக் கொள்ளுங்கள். ஏனெனில் இந்த மூதுரைகளெல்லாம் பிரகிருதிவத்தையைச் சேர்ந்தது தாய் ஆத்மவித்தைக்கனுகூலமாயும் உலகில் இல்வாழ்வுக் கின்றியமையாததாயு மிருக்குமென்பது நிச்சயம்.

மூதுரை-1.

"நன்றியொருவருக்குச் செய்தக்கால்நன்றி
என்று தருங்கொ லெனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான் தருதலால்."

உங்களையெல்லாம் பரோபகார சிந்தையோடு ஊருக்குழைக்க வேண்டுமென்று அரசர் பிரதிநிதி முதல் எல்லாரும் சொல்லி வருகி

ரூர்களே. ஊரில் நல்லார் பொல்லார் எல்லாரும் இருப்பார்களே! உபகாரம் செய்தால் அபகாரம் செய்கிறபாவிகளுமிருக்கிறார்களே யென்பீர்கள். உபகாரத்துக்கபகாரம் செய்தால் அது செய்வானைக் கர்மமாகத்தொடருமேயன்றி உபகாரியை யொருதீங்கும் செய்யவல்லதாகாது. அதை ஔவையார் இன்னொரு மூதுரையில் வெகு அழகாகச் சொல்லியிருக்கிறார். அதையும் சொல்லுகிறேன் கேட்டு மனதில் இருத்துங்கள்.

மூதுரை-2.

"நல்லார் ஒருவருக்குச் செய்தவுபகாரம்
கல்மேலெழுத்துப் போற்காணுமே—அல்லாத
ஈரமிலாநெஞ்சத்தார்க் கீந்தவுபகாரம்
நீர் மேலெழுத்துக்கு நேர்."

நல்லவர்களுக்கு உப்காரம் செய்தால் அவர்கள் அதை என்றென்றும் நினைத்து நன்றிபாராட்டுவார்கள். அந்த நன்றியைப் பரோபகார சிந்தையினால் காட்டுவார்கள். ஆதலால் அது கல்மேல் வெட்டின சிலாஸாஸநம் போல் என்றும் அழியாது விளங்கிக்கொண்டிருக்கும். அப்படிக்கில்லாத இரக்கமற்ற பாவிகளுக்கு உபகாரம் செய்தால் அவர்கள் அகத்தூய்மையில்லாக்குறையால் அதையுடனே மறந்து விடுவார்கள். அது நீரின் மேல் எழுதின எழுத்துப்போல் பயனற்றதாய் விளங்காதொழியும்.

இன்றைக்கு இவ்வளவு போதும். இன்னொரு முறை கூடும்போது இன்னும் சில அருமையான உபதேசங்களைப்பற்றிப் பேசுவோம். குழந்தைகளே இப்பொழுது விவேகசிந்தாமணி வாசித்தது போதும். சாயங்கால வேளையில் ஓடியாடி விளையாடிக் காற்றுவாங்குவோம் வாருங்கள்

குழவிக்கேற்ற கிழவனாய் உங்களுக் குழைக்க வென்று, அதிகாரிகளால் கங்கணம் கட்டி விடப்பட்ட,

எட்டுக்கு மேற்பட்ட
பட்டுத்தாத்தா.

## SCIENTIFIC RECREATIONS FOR THE YOUNG.

## சிறுவர்க்கான ஜாலவிநோதங்கள்.

### 6. சுலபமாய் எவரும் செய்துகொள்ளத் தக்க பூதக்கண்ணாடிகள்.

பிளாடினம் (Platinum) என்னும் ஓர்வித உலோகத்தால் செய்யப்பட்ட அதிக மெல்லிய கம்பியை ஒரு துடைப்பக்குச்சி கனமுள்ள இரும்பு அல்லது செம்பு கம்பியின்மேல் ஒரு சுற்றுசுற்றி அதைக் கம்பியினின்றும் கழட்டி அதில் அமைந்திருக்கும் சிறுமோதிர வடிவான சந்தில், சுத்தமான வெள்ளைக்கண்ணாடிப் பொடிகளை வைத்து அசையாமல் (Spirit-lamp) ஸ்பிரிட் என்னும் ஓர் திரவம் விட்டு எரியும் விளக்கில் அல்லது கொல்லன் உலையில் பிடிக்க கண்ணாடி உருகி கம்பியின் மோதிரத்தில் சிறு நீர்த்துளிபோல் திரட்சியாய் நின்று விடும்.

இதை உபயோகித்துப் பார்ப்பதற்கு ஒரு கண்ணாடித்துண்டில் கால்துளி ஜலம்விட்டு அதில் எறும்பு, கொசு முதலான சிறு ஜந்துக்களைவிட்டு, ஆகாயம் அல்லது விளக்கு பக்கமாய் பிடித்துக்கொண்டு அதற்கிப்பால் அரை நூல்தூரத்தில் மேற்செய்த பூதகண்ணாடியைப் பிடித்து அதின்மூலமாய்ப் பார்க்க ஜெந்துக்கள் அதிக பெரிதாய்த் தோன்றும்.

இன்னொருவிதம்,—அரைநூல் கனமுள்ள ஒரு இலேசான அச்சபித்தளைத்தகட்டில் குண்டூசி நுழையத்தக்க அவ்வளவு சிறுதுவாரம் செய்து, அத்துவாரத்தில் அசையாமல் ஒரு துளி ஜலம்விட அது உருண்டை வடிவாய்

## திருவாங்கூர் திவான்.

மேன்மை தங்கிய திருவாங்கூர் மஹாராஜா அவர்கள் மே மாசம் 11-தேதி யன்று கொடுத்த ஸந்நதுப்படி ம-ா-ா-ஸ்ரீ எம் கிருஷ்ணன் நாயர் அவர்கள் பி. ஏ, பி. எல், திருவாங்கூர் திவானாக நியமனம் பெற்று அன்றைக்கே அந்த வேலையை ஒப்புக்கொண்டு விட்டார்.

## புதியஹைகோர்ட்டு ஜட்ஜுகள்.

சென்னை ஹைகோர்ட்டுக்கு இப்பொழுதிருக்கிற 10-ஜட்ஜுகள் போதாதென்று இன்னம் 2-ஜட்ஜுகள் அதிகமாக ஏற்படுத்தியிருக்கிறார்கள். இந்தப்புதிய ஸ்தானத்துக்கு திவான் பஹதூர் வி. வி. குமாரஸ்வாமி சாஸ்திரியாரவர்களும் மிஸ்டர் நேபியரும் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கிறார்களென்றுதெரிகிறது.

நின்றுவிடும். இந்த ஜல பூதக்கண்ணுடியைப் பரீக்ஷிக்க மேற்சொன்ன விதமாய் கண்ணுடித் துண்டில் ஜலம்விட்டு அதில் கொசுமுதலான சிறு ஜெந்துக்களைப் போட்டுப் பார்க்கினும் பார்க்கலாம்; அல்லது, ஓர் துடைப்பத்தை அழுகின ஜலத்தில் துவைத்தெடுக்க துடைப்பத்தின் முனையில் நிற்கும் ஜலத்துளியை இப் பூதகண்ணுடியின் மூலமாய் சற்று தூரத்திலிருக்கும் விளக்கின் பக்கமாய்ப் பார்க்க அழுகின நீரிலிருக்கும் எண்ணிறந்த அணுக்கிருமிகள் தோன்றும். துடைப்பத்தி லிருக்குய் ஜலத்துளியை தகட்டுக்கு வெகு அருகாமையில் கொண்டுவரின் இதிலிருக்கும் நீர்த்துளியோடு அதுவுங் கலந்து தகட்டிலிருக்கும் நீர்த்துளியின் திரட்சியை அழித்து அப்பிரயோஜன மாக்கிவிடும். ஆதலின் துடைப்ப ஜலத்துளியை வெகு சாக்கிரதையாய் ஜலப் பூதக்கண்ணுடியின் பின்னுல் பிடித்திருக்க வேண்டியதவசியம்.

7. குண்டூசி ஆரோபம்.

நான்கு அங்குலம் சதுரமுள்ள ஒரு மெல்லிய காகித அட்டையில் ஊசித்துவாரம் செய்து, அவ்வட்டையை கண்ணிற்கு அரை அங்குலம் தூரத்தில் பிடித்துக்கொண்டு, கண்ணிற்கும் அட்டைத் துவாரத்திற்கும் மத்தியில் ஒரு குண்டூசியை நேராகப் பிடித்து துவாரத்தின் மூலமாக ஆகாயத்தைப் பார்ப்போமாயின் வெகுதூர தூரத்தில் ஆகாயத்தில் ஒரு பிரமாண்டமான ஒரு குண்டூசி தலைகீழாக இருப்பதாய்த் தோன்றும்.

8. இருட்டறையில் பேய்கள் காண்பிக்க.

துப்பாக்கி மருந்தில் கொஞ்சம் பிசின் ஜலம் கலந்து இவற்ருல் ஓர் இருட்டறையின் சுவரில் பயங்கரமான பிசாசு உருவத்தை எழுதி காய்ந்தபிறகு வேடிக்கை பார்ப்பவர்களை சுவரின் எதிரே தூரத்தில் நிற்கச்செய்து, நெருப்புக்குச்சியால் அவ்வுருவத்தின் கோடுகளில் எங்கேயாகிலும் பற்றவைக்க உருவமுழுதும் சடுதியில்பற்றி எதிரிலிருக்கும் ஜனங்களுக்கு ஷெ உருவம் திடீலெனத் தோன்றி மறைந்துவிடும். இக்காட்சியைக் காண்பிக்க உருவம் எழுதுவதில் அதன் கோடுகளெல்லாம் ஒன்ருேடொன்று கலக்கத்தக்கதாக எழுதவும்.

9. ஜால இங்கி.

1.—ஆக்ஸாலிக் திராவகத்தில்(Oxalic acid) ஆக்ஸைட் ஆப் கோபால்ட் (Oxide of cobalt) என்னும் மருந்தைக்கலக்கி அதில் கொஞ்சம் பொட்டிலுப்பைப் போட்டு இந்த இங்கியில் பேனுவைத் தோய்த்து எழுத எழுத்து ஒன்றும் தோன்ருது. ஆனுல் எழுதின காகிதத்தை அக்கினி அருகில் சூடுபடக் காண்பித்தால் எழுத்துகள் ரோஜாப்பூ வர்ணமாய்த்தோன்றும். ஆயினும் காகிதம் குளிரக் குளிர எழுத்து மறைந்துவிடும்.

2.—மயில் துத்தமும், முயுரியேட் ஆப் அம்மோனியாவும் (Muriate of Ammonia) சமனிடை எடுத்து ஜலத்தில் கலக்கி எழுத, எழுத்து ஒன்றும் தெரியாது. ஆனுல் எழுதின காகிதத்தை அக்கினி அருகில் சூடுபடக் காண்பிக்க அக்ஷரங்கள் மஞ்சள் வர்ணமாய்த் தோன்றும். ஆயினும் காகிதம் குளிரக் குளிர எழுத்து மறைந்துவிடும்

3.—நைட்ரேட் ஆப் பிஸ்மத்தைச் (Nitrate of Bismuth) சலத்தில் கலக்கி எழுத எழுத்து உலர்கிறவரையிலும் தோன்றும், பின்பு மறைந்துவிடும். காகிதத்தைச் சலத்தில் துவைக்க எழுதின எழுத்துகள் மறுபடியும் தோன்றும்.

4.—பச்சை நிறமுடைய (Muriate of cobalt)முயுரியேட் ஆப் கோபால்டை ஜலத்தில் கலக்கி எழுத காகிதத்தில் ஒன்றும் தெரியாது. ஆனுல் காகிதத்தை வெய்யிலில் அல்லது நெருப்பினெதிரில் சற்று சூடுண்டாகும்படி பிடிக்க மிகவும் பிரகாசமான பச்சைவர்ணமாய் எழுத்துகள் தோன்றும். காகிதம் குளிரக் குளிர எழுத்துகள் மறைந்துவிடும்.

5.—பிரஷியேட் ஆப் பொட்டாஷ் (Prussiate of Potash) என்னும் மருந்தில் மூன்று

கடுகளவினதாக எடுத்து ஜலத்தில் கரைத்து காகிதத்திலெழுத ஒன்றும் தெரியாது. ஆனால் சிறிது அன்னபேதி கரைத்திருக்கும் ஜலத்தை காகிதத்தின்மேல் தடவ எழுத்துக்கள் திடீரென நீலநிறத்தை உடையதாய்த் தோன்றும்.

6.—அன்னபேதி கரைத்த சலத்தால் காகிதத்தி லெழுதி உலரவைக்க எழுத்துகள் ஒன்றும் தோன்றாது. ஆனால் கடுக்காய்க்கொட்டை ஊறின சலத்தை அக்காகிதத்தின்மேல் தடவ, எழுத்துகள் திடீரெனக்கறுப்பு வர்ணமுடையதாய்த் தோன்றும்.

7.—மயில் துத்தம் கரைத்தசலத்தால் காகிதத்தில் எழுத, எழுத்துகளொன்றும் தோன்றா. ஆனால் அம்மோனியா (Ammonia) என்னும் திராவகத்தை மேல் தடவ, எழுதின எழுத்துக்கள் நீலநிறமுடையதாய்த் தோன்றிக் கொஞ்சநேரத்திற்குப் பின்பு மறைந்துவிடும். மறுபடியும் திராவகத்தைப் தடவ மறுபடியும தோன்றும்.

8.—அதிபம் நீர்கலந்த கந்தகதிராவகத்தால் காகிதத்தி லெழுத ஒன்றும் தெரியாது. எழுதின காகிதத்தை அக்கினி எதிரில் பிடிக்க எழுத்துகள் கறுப்பு நிறமாய்த் தோன்றும்.

9.—சாதாரணக் கஞ்சிநீரில் பேனாவைத் தோய்த்தெழுத, எழுத்து ஒன்றும் தெரியாது. ஆனால் ஒரு புட்டி சலத்தில் ஐந்தாறு துளி டிங்க்சர் ஆப் அயோடின் (Tincture of Iodine) என்னும் திராவகம்விட்டு இதில் ஷை காகிதத்தை துவைத்தெடுக்க எழுத்துகள் நீல வர்ணமாய்த் தோன்றும்.

10.—வெங்காயம் வெள்ளைப்பூண்டு இவைகளில் யாதாவதொன்றைக் கசக்கிப் பிழிந்து அச்சாற்றில் பேனாவைத் தொட்டு எழுத எழுத்துகளொன்றும் தோன்றா. ஆனால் ஒரு காகிதத்தைக் கொளுத்தி அதின் கரியை ஷை காகிதத்தின்மேல் தேய்க்க, எழுதின எழுத்து கருப்பிங்கியி லெழுதினாப்போல் தோன்றும்.

### 10. வெள்ளிசெடி உண்டாக்க.

ஒரு பெரிய புட்டியில் முக்காலளவு சுத்த நீர் (மழை ஜலம் மிகவும் நன்று) வார்த்து அதில் எவ்வளவு கரையுமோ அவ்வளவு ஸில்வர் நைட்ரேட் (Silver nitrate) அல்லது லெட் ஆஸிடேட் (Lead acetate) மருந்தை போட்டு அப்புட்டிக்கு நடுவில் சலத்தில் ஒரு துத்திநாகத் துண்டை கயிற்றால் கட்டி தொங்கவிட்டு அசையாமல் ஓரிடத்தில் வைத்து பன்னிரண்டுமணி நேரம் பொறுத்து பின்பு பார்க்க, துத்திநாகத்தின்மேல் வெள்ளிக்கொடிகள் படர்ந்திருப்பது போல் தோன்றும்.

### 11. போட்டாஷியம் என்னும் உலோகத்தின் குணங்கள்.

இந்த உலோகம் வெள்ளியைக் காட்டிலும் அதிக பிரகாசமாயும், ஈயத்தைப்போல மெதுவாயும், சடையைப்போல் நீரில் மிதக்கக்கூடிய அவ்வளவு இலேசாயுமுள்ளது. இது ஸர் ஹம்ப்ரிடேவிஸ் (Sir Humphry Davis) என்னும் ஓர் சாஸ்திரியாரால் கண்டு பிடிக்கப்பட்டது. சலம்பட்டால் இவ்வுலோகம் பற்றிக்கொள்ளும். அணிவால் தூரிகையை வெறுஞ்சலத்தில் தோய்த்து ஒரு காகிதத்தில் எழுத்து படம் முதலானவைகளை தொடர்ச்சி கோடுடையதாய் வரைந்து அக்கோடுகளில் எங்கேயாவது ஒரு துண்டு ஷை உலோகத்தை வைக்க காகிதத்தின் மேலுள்ள நீர்க்கோட்டின் மூலமாய் உலோகம் எறிந்து கொண்டே ஓடும். உலோகத்தை ஒரு கனத்த ஐஸ் (Ice) அதாவது நீர்க்கட்டியின்மேல் வைக்க அது உடனே பற்றிக்கொண்டு, நீர்க்கட்டியினுள் ஊடுருவிச்செல்லும். நீருக்கும் இவ்வுலோகத்துக்கும் இவ்வித சப்பந்தங்களிருப்பதால், உலோகத்தை (Naphtha) நாப்தா என்னும் எண்ணெயில் விட்டுவைக்கவேண்டும்.

### 12. இரும்புக்கு செம்பு கிலிட்டிட.

மயில்துத்தம் கரைத்த ஜலத்தில் பளிங்குபோல் சுத்தமாய்த் துலக்கிய இரும்பு சாமானைப்போட்டு, கொஞ்சநேரம் பொறுத்து எடுத்துப்பார்க்க, இரும்பின் மேற்புரமெல்லாம் செம்பு முலாம் பூசினதுபோலிருக்கும்.

### 13. சூட்டினால் உலோகங்கள் விரியும்.

ஒரு மோதிரத்தில் சந்தின்றி சரியாய் புகக்கூடிய ஒரு இருப்புக் கம்பியை எடுத்து நெருப்பில் செந்நிறமாய் காயவைத்து மோதிரத்துள் குவிக்க கம்பி மோதிரத்தினுள் நுழையவே நுழையாது. இவ்வுண்மை சக்கரங்களுக்கு கட்டுபோடும் தொழிலாளிகளுக்கு நன்றாய்த் தெரிந்த விஷயம்.